தமிழ் நாட்டினர் அனைவருக்கும்
படமுதலாளிகளுக்கும்
எக்ஸிபிடார்களுக்கும் எங்களது

★ புது வருஷ

வாழ்த்துக்கள்

என். எஸ். கிருஷ்ணன்
டி. ஏ. மதுரம்







அசோகா பிலிம்ஸ்.
— கோயமுத்தூர் —

# ஆயிரக்கணக்கான பேர்கள் இன்று இதை சொல்லுகிறார்கள்!



"எனக்கு குழந்தைப் பருவத்தில் குலைக்கட்டி நோய் கண்டு, தேய் வீகத்தன்மையால் அல்லது, பிழைப்பது துர்லபம் என்ற நிலைமை ஏற்பட்டது. அதனை குணப்படுத்தி என் உயிரையும் காப்பாற்றியது தான் இந்த அற்புதமான ஜம்மியின் லிவர்க்யூர்"

குழந்தைகளின் குடல், ஈரல், குலைக்கட்டி முதலிய வியாதிகளை குணப்படுத்த 'மேன்மையான நம் கை கண்டதுமான இதை அற்புத நிவாரணி' என்று உயர்ந்த வைத்தியர்கள் கூறுகிறார்கள்.

## ஜம்மியின் லிவர் க்யூர்

எல்லா விடங்களிலும் விற்கப்படுகின்றன.

ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்,
மைலாப்பூர் — மதராஸ்.
சப் ஆபீஸ்: கும்பகோணம். பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய், பெங்களூர், திருச்சினாப்பள்ளி, விஜயநகரம்.

## சாயி பாபா

கடவுள்கள், தலைவர்கள், சொந்த (Personal) போட்டோக்களின்

### எனாமல் கற்கள்

புரூச், மோதிரம், டாலர், இவைகளில் பதிக்கத் தக்கது. மற்றும் கோல்ட் பிளேட்டட் நகைகளும், ரப்பர் ஸ்டாம்புகளும், டோன் பிளாக்குகளும் தயாரித்து கொடுக்கிறோம்.

**SUBRAM & COMPANY**
Manufacturers & Representatives
**ERODE & PERUNDURAI**

-: தேவை :-

கோல்டு பிளேட்டட் நகைகளுக்கு ஸ்டாக்கிஸ்ட்களும் ஏஜண்ட்ஸும் தேவை

## ஸ்டெட்



கிராமபோன் ஊசிகள்




கடையில் கிடைக்கும் ஊசிகளில் சிறந்தது.

Made in England by J. STEAD & CO. LTD. SHEFFIELD

ஜே. ஸ்டெட் & கம்பெனியாரால் இங்கிலாந்தில் செய்யப்பட்டது.



# கொலம்பியா ரிகார்டுகளில்

# மனோன்மணி

(டாக்கி பாட்டுகள்)





GE.6054

N.S. கிருஷ்ணன்
T.A. மதுரம் } பாடிய ஊன்று ஒரு

N.S. கிருஷ்ணன் பாடிய தீனக்கருணாகரனே
(திருநீலகண்டர் கதை)

**ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.**

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

S. கண்ணன் & கம்பெனி, திருச்சிறுப்பள்ளி.

## நமது மாகாணத்தின் சகல பண்டங்களுக்கும் புதிய போக்கு வரத்து சாதனங்கள்

கீழ்க்கண்ட ஊர்களிலிருந்து ஊர்களுக்கு லாரி மூலம் உங்களுடைய வியாபார விவசாய பண்டங்களை வீட்டுக்கு வீடு கொண்டு போய்ச் சேர்க்க ஏற்பாடு செய்திருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ ராமவிலாஸ் சர்வீஸ் லிமிடெட்

**202/203, மௌண்ட் ரோடு, மதராஸ்.**

போன்: மதராஸ் "8536" :: தந்தி: "ROADHAUL" மதராஸ்

**கிளை ஆபீஸ்கள்:**

1. செரி ரோடு, சேலம்.
2. ஈஸ்வரன் கோவில் தெரு, கோயமுத்தூர்.
3. கண்டோன்மெண்ட், திருச்சினாப்பள்ளி.
4. கிருஷ்ணராயர் தெப்பகுளத் தெரு, மதுரை.
5. ஸ்ரீ நரசிம்ம ராஜா ரோடு, பெங்களூர்.

—:மார்க்கங்கள்:—

1. மதராஸ் — சித்தூர் — பெங்களூர்
2. மதராஸ் — வேலூர் — சேலம் — கோயமுத்தூர்
3. மதராஸ் — திருச்சி — மதுரை — திருநெல்வேலி
4. கோயமுத்தூர் — கள்ளிக்கோட்டை
5. கோயமுத்தூர் — கரூர் — திருச்சினாப்பள்ளி
6. சேலம் — நாமக்கல் — திருச்சினாப்பள்ளி
7. சேலம் — உளுந்தூர்ப்பேட்டை — கடலூர்
8. மதுரை — திருச்சினாப்பள்ளி — தஞ்சாவூர் — நாகை
9. மதுரை — திருச்சி — கும்பகோணம் — நாகை



உங்களது பணியைச் செய்ய எப்போதும் காத்துள்ளோம்.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 2 இதழ் 27 | 1943 ஏப்ரல் 20 | சித்திரபானு ஞு சித்திரை மீ 7உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.




"உலக மதங்கள்" என்னும் ஸர். ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் புத்தகத்துக்கு நாம் எழுதிய மதிப்புரையில் ஆசிரியர் வி. கிருஷ்ணன் பெயரைக் குறிப்பிட்டிருந்தோம். அதிலிருந்து அந்த ஆசிரியர் எப்படிப்பட்டவர், எப்படி யிருப்பார் என்றெல்லாம் நேயர்கள் பலர் கேட்டவண்ண மிருந்தார்கள். அவர்களுடைய விருப்பத்தின் படி "பகவத் கீதை" ஆசிரியரும் வஸுதேவரின் புதல்வருமான ஸ்ரீ வி. கிருஷ்ணனின் உருவப்படத்தை இம் முறை நமது மேலட்டையில் வெளியிட்டிருக்கிறோம். ஸ்ரீ கிருஷ்ணன் "பகவத் கீதை" ஆசிரியர் என்பதோடு கூட வேணுகானத்திலும் தேர்ந்தவராதலால் அந்தத் தோற்றத்தில் அவருடைய உருவப் படம் தரப்படுகிறது. புராதன இந்தியக் கலை முறையில் இவ்வளவு அற்புதமாக இந்த உயிரோவியத்தை வரைந்து தந்த ஸ்ரீமதி வசந்தாவுக்கு நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீமதி வசந்தா, காலஞ்சென்ற தலைவர் ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரின் பேத்தி (ஸ்ரீ எஸ். பார்த்தசாரதியின் புதல்வி) என்பதை நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம்.




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


# என்ன சேதி?

## ஞாபகத் திருநாள்

தமிழ்த் தாய்க்கு அரும் பெரும் தொண்டும் தமிழ் நாட்டுக்குப் பரோபகாரமும் செய்த மகாமகோபாத்தியாய சுவாமிநாதய்யர் அவர்களின் வருஷாப்திக தினம் ஏப்ரல் மீ 28வ. நேருகிறது. அன்று ஐயரவர்களுடைய ஞாபகத் திருநாள் தமிழ் நாடெங்கும் கொண்டாடப்படு மென்று எதிர்பார்க்கலாம். ஐயரவர்களுடைய ஞாபகத்தை இன்னும் ஒரு சிறந்த முறையிலும் கொண்டாட வேண்டு மென்று அவர்களுடைய தலை சிறந்த சீடரும் "கலைமகள்" ஆசிரியருமான ஸ்ரீ கே. வி. ஜகந்நாதன் யோசனை கூறியிருக்கிறார். "அவர்கள் சேகரித்து வைத்திருக்கும் தமிழ்ச் செல்வம் அளவில் அடங்காதது ... வெளியிட வேண்டிய நூல்கள், ஆராய வேண்டிய குறிப்புக்கள், தொகுக்க வேண்டிய செய்திகள், உருப்படுத்த வேண்டிய வரலாறுகள், வரிசைப்படுத்தி அமைக்க வேண்டிய தனிப் பாடல்கள், பத்திரமாகப் பாதுகாக்க வேண்டிய பழம் பொருள்கள்—இப்படித் தமிழ்த் தாயின் நலத்தைப் பல வகையிலும் வளர்க்கும் அரிய பண்டங்களை அவர்கள் 'வைத்து விட்டுச் சென்றிருக்கிறார்கள்" என்று ஸ்ரீ கே. வி. ஜகந்நாதன் தெரிவித்து, இந்த மூலப் பொருள்களை யெல்லாம் சரிவரப் பயன்படுத்துவதற் கென்று ஒரு தனி ஸ்தாபனம் அமைக்க வேண்டு மென்று யோசனை சொல்லி யிருக்கிறார். இந்தக் கோரிக்கையை நாம் பூரணமாக ஆமோதிப்பதுடன் தமிழன்பர்கள் கூடி ஆலோசித்துத் தகுந்த ஏற்பாடுகள் செய்ய வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

## 'ஒரு கூடை செங்கல்லும்'...

பிடாரி என்று ஒரு பழமொழி உண்டல்லவா? அமெரிக்கா இந்தியா விஷயத்தில் பிரிட்டன் பாடும் பல்லவியையே பாடுவதைக் கவனிக்கும்போது நமக்கு அந்தப் பழமொழிதான் ஞாபகம் வருகிறது. சமீபத்தில் அமெரிக்க சர்க்கார் காரியதரிசியான ஸம்னர் வெல்ஸ் "யுத்தம் நின்ற பிறகு இந்தியாவுக்குச் சுய ஆட்சி அமைக்கும் விஷயம் கவனிக்கப்படும்" என்று கூறினார். இவர் சொல்வதற்கும் சர்ச்சில் அமெரி துரைகள் சொல்வதற்கும் யாதொரு வித்தியாசத்தையும் காணோம்.

அட்லாண்டிக் சாசனத்தைப் பிரகடனப் படுத்திய அமெரிக்க சர்க்காரின் பிரதிநிதி இப்படிப் பிரிட்டிஷாரை ஆதரித்துப் பேசுவானேன்? பிரிட்டிஷாரிடம் பயமா? பிரிட்டன் இன்று அமெரிக்காவிடம் கோடானு கோடி டாலர்கள் கடன் பட்டிருக்கிறது. வட ஆப்பிரிக்கப் போர் வெற்றிகரமாக நடந்து வருவது பெரும்பாலும் அமெரிக்காவின் உதவியினால்தான். தென் பஸிபிக் சமுத்திரத்தில் நாளதுவரை ஜப்பானியரை மேலும் அதிக்ரமிக்காமல் தடுத்து வைத்திருப்பது அமெரிக்காவின் உதவியைக் கொண்டுதான். சர்ச்சில் துரையோ எடுத்ததற்கெல்லாம் வாஷிங்டனுக்கு ஓடிப் போய் ரூஸ்வெல்ட்டைப் பேட்டி கண்டு வருகிறார். ஆனால் ரூஸ்வெல்ட் லண்டனுக்கு ஒரு முறைகூட வந்ததில்லை. அமெரிக்க சேனாபதியான ஜெனரல் எய்ஸன் ஹோவர் ஜெனரல் கிராட்டை ஆதரித்தபோது சர்ச்சில் துரை வாயைத் திறக்க வழியில்லாமல் ஜெனரல் டிகாலை நட்டாற்றில் கைவிட்டு விட்டார்.

இப்படியெல்லாம் பிரிட்டன் அமெரிக்காவிடம் தாஸானுதாஸனாக நடந்து கொள்கிறதே, இந்திய ராஜீய நெருக்கடியைப் பிரிட்டன், உடனே தீர்க்க வேண்டுமென்று அமெரிக்கா வற்புறுத்தினால் அது கேட்குமா, கேட்காதா? கேட்கும். இந்த யுத்தத்தில் பிரிட்டன் உயிரோடு தப்பவேண்டுமானால் அது கேட்டாக வேண்டும். இல்லாவிட்டால் அமெரிக்க உதவி கிடைக்காது. பின் ஏன் அமெரிக்கா தலையிடவில்லையென்றால், அங்கேயும் அதிகார பதவியில் உள்ளவர்கள் சர்ச்சில் மனப்பான்மை கொண்டவர்களாயிருப்பதுதான் காரணமாயிருக்க வேண்டும். இந்த மனப்பான்மையை மாற்றத்தான் வில்கி முதலியவர்கள் கிளர்ச்சி செய்து வருகிறார்கள்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: கே. பத்மநாபன், நாகர்கோவில்.


இந்திய நிர்வாகசபையில் காலியாயிருக்கும் ஸ்தானங்களுக்கு ஆள்பிடிக்கும் முயற்சி இன்னமும் நடந்து வருகிறது.


ஸ்ரீஜெயப்பிரகாச் நாராயணனைப் பிடிப்பவர்களுக்கு ரூ.5000 பரிசு என்று பீஹார் சர்க்கார் அறிவித்திருந்தார்கள். பரிசுத் தொகையை இப்போது ரூ.10,000 என்று உயர்த்தியிருக்கிறார்கள்.
10,000 ரூ. 5000 பரிசு. ஜெயப்பிரகாச் நாராயணனைப் பிடித்துக் கொடுத்து இந்தப் பரிசைப் பெறுங்கள்.
10,000 ரூ. 5000 பரிசு, ஜெயப்பிரகாச் நாராயணனைப் பிடித்துக் கொடுத்து இந்தப் பரிசைப் பெறுங்கள்.


காங்கிரஸ்மேல் சர்க்கார் குற்றம்சாட்டி வெளியிட்ட பிரசுரம் 20,000 பிரதிகள் விற்று விட்டனவாம். இரண்டாம் பதிப்பு வெளியாகப் போகிறதாம்.
காங்கிரஸ் மேல் குற்றப் பத்திரம் 2 அணா
டாட்டன்ஹாம் பிரசுரம் 1943 வருஷத்திய மகத்தான சம்பவங்களுக்கு இதுவரை 20,000 பிரதிகள் விற்றுப் போய்விட்டன


"வெள்ளைக்காரர் வசிக்கு மிடத்திற்கு வேண்டுமென்று வருவது இந்தியர்களுடைய தப்புத்தான்" என்று ஸ்மட்ஸ்துரை நியாயம் சொல்கிறார்.
வெள்ளையர் நிறத்துவேஷம்
தென்னாப்பிரிக்க இந்தியர்
ஸ்மட்ஸ்


கடுகிலமை காடுகளைத் தூக்கிப் பிடித்து, ருஷியர்களை முறியடித்துத் துரத்தி...... கடுவில்பேசவேண்டாம்....."ஆமாம்" என்று சொல்லும்!......
ஹிட்லரும் முஸோலினியும் 12வது தடவையாகச் சந்தித்துப்பேசினார்கள்.


புலிவருகிறது!
புலிவருகிறது!!
ஆஸ்திரேலியா.
ஜப்பான் அபாயத்தைப்பற்றி ஆஸ்திரேலியர் பெருங்கூச்சல் போடத்தொடங்கியிருக்கிறார்கள். இது உண்மையான அபாயக் கூச்சல்தானா என்பதைப்பற்றி இங்கிலாந்தில் சந்தேகம் உண்டாகியிருக்கிறது.


A
ருஷிய சர்வாதிகாரி ஸ்டாலினுக்கு, இரண்டு இங்கிலீஷ் ஆசிரியர்கள், இங்கிலீஷ் கற்றுக்கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்களாம்.


SECOND FRONT
ஸ்டாலின் இங்கிலீஷ் கற்றுக்கொள்வது "இரண்டாவது போர்முனை"யைப் பலமாகக் கேட்பதற்குத்தான் என்று சந்தேகிக்கப் படுகிறது.

# சுதந்திரத்துக்கு இதோ வழி!

இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையைப் பற்றி எழுதி எழுதி நமக்கு அலுத்துப் போய்விட்டது. ஒரே விதமான அபிப்பிராயத்தைப் படித்துப் படித்து நமது நேயர்களுக்கும் அலுத்துப் போயிருக்கலாம். எனவே, மாறுபட்ட அபிப்பிராயங் கொண்ட நமது சகோதரப் பத்திரிகைகள் சிலவற்றின் அபிப்பிராயங்களை — இந்தியா சுதந்திரம் அடைவதற்கு அவை கூறும் யோசனைகளை — இங்கே எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

முதலில் "அதி மேதாவி" என்னும் பத்திரிகை என்ன சொல்கிறதென்று பார்ப்போம்:—

## செய்யவேண்டிய காரியம்

"நாம் அப்பொழுதே இந்த ராஜாஜிக்குச் சொன்னோம்; இடித்து இடித்து எடுத்துக் காட்டினோம்; 'வைஸ்ராயிடம் போக வேண்டாம், போனால் காரியம் கைகூடாது' என்று எச்சரிக்கை செய்தோம்; அவர் கிளம்பும்போது சகுனத் தடையாக ஒரு குட்டிப் பூனையைக் குறுக்கே விட்டுப் பார்த்தோம்; எதிரே நின்று தலையில் தலையில் போட்டுக் கொண்டு பார்த்தோம். ஒன்றையும் அவர் பொருட்படுத்தவில்லை.

போனார்; திரும்பி வந்தார். கண்ட பயன் என்ன? பூஜ்யந்தான்.

இந்தியா சுதந்திரம் அடைய இதுவா வழி? வைஸ்ராயிடம் காவடி எடுத்துச் செல்வதா முறை? — ஹஹ்ஹஹ்ஹா! — நேயர்களே! அதிகம் சிரிக்காதீர்கள்! பல் சுளுக்கிக் கொள்ளப் போகிறது!

பிறகு, இந்தியா சுதந்திரம் அடையும் வழி என்னவோ என்று நீங்கள் கேட்கலாம். அதிலே தான் மர்மம் இருக்கிறது: அதிலே தான் சூக்ஷ்மம் இருக்கிறது. அந்த மர்மத்தையும் சூக்ஷ்மத்தையும் வெளியிடுவதற்கு நாம் இருக்கவே இருக்கிறோம்.

ஆனால் ஒரு தடை குறுக்கே நிற்கிறது. அது காகிதப் பஞ்சந்தான். இந்தியாவின் சுதந்திரத்தை அடையும் வழியைப் பற்றிச் சொல்வது லேசான விஷயமல்ல. பக்கம் பக்கமாக எழுதியாக வேண்டும். எழுதுவதற்கு நாம் சளைக்கப் போவதில்லை. கையில் பேனா உள்ளவரையில், கூட்டில் மசி இருக்கும் வரையில் உடம்பில் உயிர் உள்ள வரையில் எழுதத் தயாராயிருக்கிறோம், ஆனால் காகிதம் எங்கே? — 'எங்கே?' என்ற எதிரொலிதான் கேட்கிறது.

ஆகவே, இப்போது தேசத்தின் முன்னுள்ள மகா முக்கியமான காரியம் என்னவென்றால், நமது 'அதி மேதாவி'ப் பத்திரிகைக்கு உடனே காகிதம் வரவழைத்துக் கொடுப்பது தான். கானடாவிலிருந்தாலும் சரி, அமெரிக்காவிலிருந்தாலும் சரி, அல்லது சத்துருக்களின் வசப்பட்ட நார்வேயில் இருந்தாலும் சரி, எப்படியாவது காகிதம் வந்தாக வேண்டும். அதற்குத் தேசமக்கள் பெருங் கிளர்ச்சி செய்ய வேண்டும். அதிகாரவர்க்க சர்க்காரைத் தாக்கு தாக்கு என்று தாக்க வேண்டும்.

வீணாக டில்லிக்கும் அலஹாபாத்துக்கும் போய் அலைந்து விட்டு வெறுங் கையுடன் திரும்பி வரும் ராஜாஜி இந்த முக்கியமான முயற்சியில் ஈடுபட்டு, கையில் ஒரு டன் காகிதத்தோடு வந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?"

* * *

இந்தியாவின் சுதந்திரத்துக்குப் "பிரகஸ்பதி" என்னும் பத்திரிகை காட்டும் வழியை இதோ கேளுங்கள்:—

## நமது முன்னணி வேலை

"ராஜாஜிக்குச் சுரம் வந்து வீட்டில் படுத்திருப்பதாகத் தெரிய வருகிறது. ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. சில நாளைக்கு ரயிலில் கூட்டம் இல்லாமலிருக்கும். அதோடு இன்னும் சில நாளைக்கு அவருடைய அறிக்கைகள் புறப்படாமலுமிருக்கும். நமது பத்திரிகையில் அவருடைய அறிக்கையைப் போடுகிற இடத்தில் ஒரு விளம்பரத்தைப் போட்டாலும் எவ்வளவோ பிரயோஜனம் உண்டு என்னும் அபிப்பிராயத்தை நாம் வெகு நாளாகவே அவலம்பித்து வருகிறோம். 'விளம்பரம்' என்று கேட்டதும் வாசகர் சிலருக்கு விளக்கெண்ணெய் சாப்பிடுவது போன்ற உணர்ச்சி உண்டாகலாம். ஆனால், விளம்பரந்தான்

பத்திரிகை உலகத்தின் ஜீவன் என்பது அவர்களுக்குத் தெரியாது. விளம்பரம் இல்லாவிட்டால் பத்திரிகை நடக்காது. பத்திரிகை இல்லாவிட்டால், அதிலும் முக்கியமாக, 'பிரகஸ்பதி' போன்ற பத்திரிகை இல்லாவிட்டால், ராஜாஜி முதலியவர்களின் வீண் முயற்சிகளைக் கண்டிப்பது யார்? அவர்களால் இந்தியாவின் சுதந்திரத்துக்கு ஏற்படும் அபாயங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்துக் காட்டுவது யார்?

ஆகவே, தற்சமயம் நமது முன்னணி வேலையாயிருப்பது 'பிரகஸ்பதி'க்கு விளம்பரம் சம்பாதிப்பதேயாகும். விளம்பரம் — அதிக விளம்பரம் — இன்னும் அதிக விளம்பரம் — நமக்குத் தேவை. கொஞ்ச நாளைக்கு அரசியல்வாதிகள் எல்லாரும் எல்லா வேலையையும் ஒதுக்கி வைத்துவிட்டுப் 'பிரகஸ்பதி'க்கு விளம்பரம் தேடும் வேலையில் முனைந்தார்களானால், பிறகு இந்தியாவின் சுதந்திரத்தைத் தேடி டில்லிக்கும் அலகாபாத்துக்கும் ஓட வேண்டிய அவசியம் ஏற்படாது. அவரவர்கள் இருந்த இடத்திலிருந்தே சுயராஜ்யம் அடையலாம்.

தேச சுதந்திரத்தை முன்னிட்டு நமது பத்திரிகை முழுவதையும் விளம்பரமாகவே போட்டு நடத்தவும் நாம் தயார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.''

* * *

இந்திய சுதந்திரத்துக்காக ரொம்ப ரொம்பப் பாடுபட்டிருக்கும் ''பிராணத்யாகி'' என்னும் பத்திரிகை எழுதுவதையும் சிறிது பார்த்துவையுங்கள் :—

## முக்காலணாவில் சுதந்திரம்

''ஆதியில் பிரம்மா இந்த உலகத்தைப் படைத்ததிலிருந்து நாம் எப்படியோ பிராணனைக் கையில் பிடித்துக் கொண்டு இந்த தேசத்துக்கு ஊழியம் செய்து வந்திருக்கிறோம். கிராம வெட்டியார்கள் முதல் நிர்வாக சபை அங்கத்தினர் வரையில், — ஜில்லா முனிசீப், ஸப் ஜட்ஜ், ஹைகோர்ட் ஜட்ஜ் உள்பட — எல்லாருடைய குறைகளையும் அவ்வப்போது வெளியிட்டுச் சம்பளம், படிச்செலவு முதலியவைகளில் அபிவிருத்தி செய்து வந்திருக்கிறோம். அதிகார வர்க்கத்தின் அநீதிகளை அவ்வப்போது நயத்திலும் பயத்திலும் எடுத்துக்காட்டிப் பரிகாரம் தேடி வந்திருக்கிறோம். இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கையை ஆணித்தரமாகவும் நமக்குத் தொந்தரவு நேராத வகையிலும் எடுத்துச் சொல்லி வந்திருப்பதுடன், தாதாபாய் நௌரோஜி காலம் முதல் ராஜாஜி காலம் வரையில் யார் யார் எந்தெந்த விதத்தில் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டாலும் அவர்களுக்கெல்லாம் கூடுமான வரையில் நம்முடைய மேலான ஆதரவை அளித்து வந்திருக்கிறோம். சுருங்கச் சொன்னால், தேச நன்மைக்காகவும் பொதுஜன நன்மைக்காகவும் நாம் எவ்வளவோ தடவை பிராணத்யாகத்துக்குத் தயாராயிருந்திருக்கிறோம். இத்தியாதி காரணங்களால் நமது பத்திரிகை கேவலம் மற்றப் பத்திரிகைகளைப் போல் ஒரு சாதாரணப் பத்திரிகையாயிராமல் காங்கிரஸ் மகா சபைக்கும், ஸநாதன தர்ம ரக்ஷண சபைக்கும் ஈடான ஒரு மகத்தான தேசிய ஸ்தாபனமாகவே ஆகிவிட்டது.

அப்பேர்ப்பட்ட நமது பத்திரிகையின் விலையில் சமீபத்தில் முக்காலணா உயர்த்தும்படியாக நேரிட்டது என்பதை நேயர்கள் இதற்குள்ளாகத் தெரிந்துகொள்ளாமலிருக்க முடியாது. இதைப்பற்றி நாம் எவ்வளவோ நிதானமாக ஆழ்ந்த யோசனைகள் செய்தோம். 'ஒன்றே முக்காலணாவா? இரண்டரையணாவா?' என்னும் பிரச்னையைக் கிட்டத்தட்டத் தலை வெடித்துப் போகும்வரையில் சிந்தனை செய்தோம். அதன் பிறகுதான் இரண்டரையணா என்னும் முடிவுக்கு வந்தோம். ஒன்றே முக்காலணா விலையில் நாம் கொடுக்கக் கூடிய பக்கங்களையும், செய்திகளையும் பற்றி நினைக்கும் போதே நமக்கு மார்பைப் பக் பக் என்று அடித்துக் கொண்டது. செய்திகளுக்கு நம்மையே நம்பி உயிர் வாழும் நமது வாசகர்களை அவ்விதம் அநியாயமாய்க் கைவிடக் கூடாது என்று தீர்மானித்தே இரண்டரையணா விலையை நிர்ணயித்தோம். இது நமது பதினாயிரக்கணக்கான வாசகர்களுக்கும் சம்மதமாயிருக்கிறதென்று அறிந்து அளவிறந்த மகிழ்ச்சி கொள்கிறோம். கேவலம், நேற்று — முந்தாநாள் — முளைத்த காளான் பத்திரிகைகளைப்போல் நமது பெருமையை நாமே பறையடித்துக் கொள்ளும் வழக்கம் நமக்குக் கொஞ்சமும் இல்லாவிட்டாலும், நேற்று நமக்கு நிஜமாகவே தபாலில் கிடைத்த ஒரு கடிதத்தை வெளியிடாமலிருப்பது நமது நேயர்களுக்கு நீதி செய்வதாகாது என்று

கருதுகிறோம். அந்தக் கடிதம் என்ன வென்றால் :—

'தங்களுடைய பத்திரிகை விலையில் மூக்காலணா உயர்த்தியது குறித்துப் பரவசமடைகிறேன். ஒன்றே மூக்காலணா விலையில் நடக்கும் ஒரு பத்திரிகையை நேற்று நான் பார்த்தவுடன் தூக்குப் போட்டுக் கொள்ளலாமா என்று தோன்றியது. உடனே, நமது 'பிராணத்யாகி' பத்திரிகை இரண்டரையணாவிற்கு விற்கும்போது நமக்கு என்ன குறை என்றெண்ணி ஆறுதல் பெற்றேன். நிஜமாக, ஒன்றே மூக்காலணாவுக்குக் கிடைக்கக் கூடிய செய்திகளைப் படித்துவிட்டு என்னால் ஒரு நாள்கூட ஜீவித்திருக்க முடியாது. இரண்டரையணாச் செய்திகளையாவது படித்தால்தான் இந்த மண்ணுலகில் என்னால் உயிர் வாழ்ந்திருக்க முடியும்.'

மேற்படி பாராட்டுக் கடிதத்திலிருந்து, இந்த நாட்டில் ஆயிரக் கணக்கானவர்கள் தற்கொலை செய்து கொண்டு மரணமடையாதபடி நாம் தடுத்து வருகிறோமென்பது நன்கு விளங்கும். இப்பேர்ப்பட்ட அரிய சேவையை நாம் செய்து வந்தபோதிலும், தேசத் தலைவர் என்று சொல்லிக் கொள்ளும் மிஸ்டர் வி. ஆர். நமது இரண்டரையணா விலையை ஆதரித்து ஒரு அறிக்கைகூட இன்னும் விடவில்லையென்பது எவ்வளவு ஆச்சரியமான விஷயம்? இத்தனைக்கும் அவருடைய எவ்வளவோ உபயோகமற்ற அறிக்கைகளையெல்லாம் இந்தப் பத்திரிகையில் நாம் வெளியிட்டு வந்திருக்கிறோம் என்பதை எண்ணும்போது நமக்கு வயிற்றை எரியத்தான் செய்கிறது. இன்னமும் சில ஜனங்கள் ஒன்றே காலணாப் பத்திரிகைகளை வாங்கிப் படித்து வருகிறார்கள் என்பதை அவர் பார்த்துக் கொண்டும் சும்மா இருக்கிறார் என்றால்? ......சரி, எது எப்படிப் போனாலும் நேயர்கள் நமது இரண்டரையணாப் பத்திரிகையை மட்டுமே வாங்கி ஆதரிப்பார்களென்று நம்புகிறோம். தேசம் சுயராஜ்யம் அடையும் பொருட்டு மூக்காலணா அதிக விலை கொடுப்பது ஒரு பிரமாத காரியமா?''

* * *

''பிசாசு'' என்னும் பத்திரிகை பயங்கரமாக எழுதியிருப்பதையும் கொஞ்சம் பயப்படாமல் படித்து வைப்போமாக :—

## சுயராஜ்யம் வேண்டுமா?

''நமக்கு இன்று பிரமாதமாகக் கோபம் வந்திருக்கிறது. கோபத்தில் தலை கால் தெரியவில்லை. ஆபீஸ் மேஜையை நாலு குத்துவிட்டோம். கோபம் தீரவில்லை. ஆபீஸ் பையனை நாலு அறை பேய் அறைவது போல் அறைந்தோம். அப்படியும் கோபம் தீரவில்லை. யாரையாவது இப்போது திட்டியாக வேண்டும்; வைதே தீரவேண்டும். யாரை வையலாம்? சர்க்காரை வையலாமா? சனியன் பிடித்த சட்டம் குறுக்கே நின்று தொலைக்கிறது. சர்ச்சிலையும் அமெரிக்கையையும் வெளுத்து வாங்கலாமா? — ஏற்கெனவே அவர்களை நாம் வெளுத்த வெளுப்பில் ஒரே வெள்ளையாய்ப் போயிருக்கிறார்கள்! இராமசாமி நாயக்கரை விடு விடென்று விடலாமா? அந்த மனுஷன் இப்போதெல்லாம் வாயைத் திறக்க மாட்டேனென்கிறார்! — ராஜாஜியைத் திட்டலாமா? — திட்டலாம்; எத்தனையோ தடவை இந்தப் பத்தியில் காரசாரமாய்த் திட்டியுமிருக்கிறோம் — ஆனால் அந்தப் பொல்லாத மனுஷர் ஏதாவது கேஸ் போட்டு விடுவாரோ என்ற பயம் இப்போது ஏற்பட்டிருக்கிறது.

ஆகவே, இந்த இதழில் நமது வாசகர்களையே எடுத்துக் கொள்கிறோம். நமது பத்திரிகை விலையை மூக்காலணாவிலிருந்து ஒன்றே காலணா ஆக்கியவுடனே நமது வாசகர்களில் பலர் பத்திரிகை வாங்குவதை நிறுத்தியது யோக்யமான காரியமா என்று கேட்கிறோம். இப்பேர்ப்பட்ட மடக் கழுதைகள் நமது பத்திரிகையை வாங்கினாலென்ன, வாங்கா விட்டாலென்ன என்று கேட்கிறோம். இப்பேர்ப்பட்ட மிருகங்களுக்குச் சுயராஜ்யம் வேறு கேடா என்று கன்னத்தில் அறைந்து கேட்கிறோம். ஆமாம்; இவர்களுக்கெல்லாம் சுயராஜ்யத்துக்கு வழிகாட்ட நாம் தயாராயில்லை; சுடுகாட்டுக்கு வேணுமானால் வழி காட்டுகிறோம்!''

* * *

கடைசி கடைசியாக, ''மலை விழுங்கி'' பத்திரிகை தனது கடைசி இதழில் கூறுவதைக் கவனித்து வைப்போம் :—

## சுதந்திரத்தைக் கைப்பற்றுங்கள்!

''சிங்கம் மலையில் இருக்கிறது; எலி வளையில் இருக்கிறது — இருக்-

கட்டும், இருக்கட்டும்! சிங்க ராஜாவைப் பற்றிச் சொல்லும்போது, ராஜாஜியின் ஞாபகம் வருகிறது. ராஜாஜி என்றும் சொல்லலாம்; ராஜாஜிஜிஜிஜிஜி என்று சொல்ல லாம். ஏனென்றால், அவர் தம்மை அவ்வளவு புத்திசாலிலிலிலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறார். அவ ருடைய தவறுகளை நாம் எவ்வ ளவோ தடவைகளில் எடுத்துக் காட்டி யும் அவர் சிறிதும் திருந்தியதாகத் தெரியவில்லை. பழைய போக்கிலேயே போய்க் கொண்டிருக்கிறார். 'மற்ற வர்கள் சொல்வதெல்லாம் தப்பு; நான் சொல்வதுதான் சரி' என்ற அபிப் பிராயம் அவருடைய அந்தரங்கத்தில் வேரூன்றி இருப்பதாகத் தெரிகிறது.

வைஸராயிடம் போக வேண்டாம் என்று எவ்வளவோ தடவை நாம் முட்டிக் கொண்டோம்; அப்படியும் அவர் கேட்காமல் போய் அவமான மடைந்து திரும்பினார்.

திரும்பிய பிறகாவது சும்மா இருக் கிறாரா? இந்திய சுதந்திர விஷயத் தில் அமெரிக்காவையும் சீனாவையும் எதிர்பார்க்க வேண்டு மென்கிறார். அமெரிக்காவைப் பார்ப்பதாம்! இந்தி யாவுக்கும் அமெரிக்காவுக்கும் மத்தி யில் எவ்வளவு பெரிய சமுத்திரம் இருக்கிறதென்று இவருக்குத் தெரி யுமா? சீனாவைப் பார்ப்பதாம்! எப்படிப் பார்ப்பது? நடுவில் பிரம் மாண்டமான இமயமலை இருக்கிறதே?

ஹா! ஹா! ஹா!

உண்மையில், இந்தியாவின் சுதந்தி ரத்துக்கு நாம் பார்க்கவேண்டிய இடம் எது தெரியுமா? — யோசித்துப் பாருங் கள் — ஆமாம்; ஆகாகான் அரண் மனைதான். — அங்கேதான் இந்தியா வின் சுதந்திரம் பிறக்கப் போகிறது. எப்படி? — சில நாளைக்குமுன் வந்த செய்தியை யோசியுங்கள்.—''மகாத்மா சாகும் வரையில் உண்ணாவிரதம் ஆரம் பிக்கலாம்!'' — ஆ! அதுவல்லவா சுதந்திர இரகசியம்? மகாத்மா சும்மா இருப்பாரா? மகத்தான இந்தியா தேசத்தின் சுதந்திரத்தை முன்னிட்டு ஒரு மனுஷருடைய உயிர்தான் பெரி தாகுமா?

ஆகையால்தான், ஆகாகான் அரண் மனையைக் கவனிக்கச் சொல்கிறோம்.

அதோடு, இந்த இதழில் வெளி யாகும் நமது ரூ. 8500 போட்டிப் பந்தயத்தையும் கவனிக்கச் சொல் கிறோம். பரிசுத் தொகை கேவலம் ரூ. 8500 தான் என்று நாம் குறிப்பிட் டிருந்தாலும், உண்மையில் ரூ. 0058க் குறையாதபடி ரொக்கமாகவே வி நியோகித்து விடுவதென்று பழனி யாண்டவன் சந்நிதியில் சத்தியம் செய்திருக்கிறோம். பிரவேசக் கட்டண வசூலைப் பற்றி நாம் கொஞ்சமும் கவலைப்படப் போவதில்லை. நாற்பதினா யிரம் ரூபாய் அல்லது ஐம்பதினாயிரம் வசூலாகி, ரூபாய்க்குப் பதினாறு அணா விதம் சர்க்காருக்கு அமிதலாப வரி கட்ட வேண்டி வந்தாலும், நாம் பொருட்படுத்தப் போவதில்லை. ஆகவே, எவ்வளவு கூப்பன் வேண்டுமானாலும் விற்பனைக்குத் தயார்.

சமுத்திரத்துக்கு அடியில் திமிங் கலத்தின் வயிற்றில் நாம் பத்திரப் படுத்தி சர்டிபிகேட் வாங்கி வைத் திருக்கும் விடைக்குச் சரியான விடை எழுதியனுப்புகிறவர்களுக்கு, அகவிலை ஏறி விற்கும் இந்தத் தரித்திர காலத்தில் பெரிய அதிர்ஷ்டம் காத்திருக்கிறது. அந்த அதிர்ஷ்டத்தை நினைத்தால் நமக்கே நாக்கில் ஜலம் ஊறுகிறது!

ஆகையினால்தான், ஆகாகான் அரண்மனையைக் கவனிப்பதோடு, நமது போட்டிப் பந்தயப் பக்கத் தையும் கவனிக்கச் சொல்கிறோம். இந்தக் காகிதப் பஞ்ச காலத்தில் போட்டிப் பந்தயத்துக்காக ஒவ்வொரு இதழிலும் நாம் ஏழெட்டுப் பக்கம் செலவழித்து வருகிறோம் என்ப தையும் அவர்கள் கவனித்தேயாக வேண்டும். இதிலிருந்தே தேசம் சுதந்திரம் அடைவதற்குப் போட்டிப் பந்தயம் எவ்வளவு முக்கியமான தென்பதை நேயர்கள் அறிந்து கொள்ளலாம். ஆகவே, எல்லாரும் நமது போட்டிப் பந்தயத்தில் கலந்து கொண்டு தேச சுதந்திரத்தைக் கைப்பற்றுவார்களாக.''


## சந்தா விவரம்

('கல்கி' மாதம் மும்முறை)

ஏப்ரல் முதல் தேதியிலிருந்து

வருஷ சந்தா ... ரூ. 9—0—0

ஆறு மாத சந்தா... ரூ. 4—8—0

குறிப்பு:—இலங்கைக்கும் புதிய சந்தா விகிதம் மேற்கண்டபடிதான்.

விரைவில் வருகிறது!

# ஹரிச்சந்திரா

—— கன்னடம் ——





சுப்பய்ய நாயுடு P. S. ராஜா அய்யங்கார்
நாகேந்திர ராவ் கிருஷ்ணமூர்த்தி ராவ்
லக்ஷ்மி பாய் M. G. மரி ராவ்
முதலியோர் நடித்தது

STUDIO:
PRAGATI

A FAMOUS TALKIE RELEASE



# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு :: மதராஸ்

லோகல் ஆபீஸ்கள்:
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம், மவுண்டு ரோடு.

தென்னிந்தியாவில் எல்லா முக்கியமான இடங்களிலும்
பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

அதிகாரம் பெற்று வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் ரூ. 60,00,000
செலுத்தப்பட்ட மூலதனம் (26-3-43வரையாக) ரூ. 27,41,390
ரிஸர்வ் நிதி (26-3-43வரையாக) ரூ. 29,46,915

மொத்த லேவாதேவி ரூ. 7 கோடிக்கு மேல்

அங்கீகரிக்கப்பட்ட செக்யூரிடிகளின் பேரில் கடன்கள், ஓவர் டிராப்டுகள், காஷ் கிரெடிட்கள் கொடுக்கப்படும்.

விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸிற்காவது விண்ணப்பித்துத் தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி

# புது வருஷத் தீர்மானங்கள்

"தூமிலன்"

நல்ல வேளையாக, இந்திய சர்க்கார் இப்போது காலத்தை ஒரே ஒரு மணி நேரம் மட்டுந் தள்ளி வைத்திருக்கிறார்கள். யுத்தத்தில் வெற்றி பெறுவதற்காகக் காலத்தை இன்னும் (365 x 24) 8760 மணி நேரம், அதாவது ஒரு வருஷம் தள்ளிவைக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. ஆகையால் சுபானு வருஷம் எவ்வித ஆபத்துமின்றிக் காலா காலத்தில் ஜனனமாயிற்று என்பதைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

புது வருஷத்தில் நல்லவிதமாக நடந்து கொள்வதைப் பற்றி ஏதாவது தீர்மானங்கள் செய்து கொள்ளும் சம்பிரதாயம் மேல் நாட்டாரிடமுண்டு. அம்மாதிரி செய்தால் சிலருடைய தீர்மானங்கள் எப்படி யிருக்குமென்று கற்பனை செய்து பார்க்கலாம்:—

அடால்ப் ஹிட்லர்

நான் நல்ல யூதப் பெண்ணாக ஒருத்தியைப் பார்த்துக் கல்யாணஞ் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாய்க் காலங் கழிக்கப் போகிறேன். முதலில் பிறக்கும் பிள்ளைக்குச் சர்ச்சில் என்றும், இரண்டாவது பிள்ளைக்கு ஸ்டாலின் என்று பெயர் வைக்கப் போகிறேன்.

கர்னல் அமேரி

'ஆகஸ்ட்', 'மாதம்' 'எட்டு', 'தேதி' ஆகிய நான்கு வார்த்தைகளையும் அகராதியிலிருந்து எடுத்து விட ஒரு சங்கம் ஸ்தாபிக்க முயற்சி செய்வேன்.

டாக்டர் கோப்பல்ஸ்

இந்த வருஷத்தில் என்ன வந்தாலும் சரி, ஒரே ஒரு நிஜம் சொல்லிவிட வேண்டியதுதான்.

லின்லித்கோ பிரபு

வருகிற அக்டோபர் மாதத்துடன் நான் வைஸ்ராய் பதவி வகித்து $7\frac{1}{2}$ வருஷம் ஆகிவிடும். அப்பொழுது இந்தியப் பொதுமக்கள் எனக்கு "இந்தியாவைப் பிடித்த ஏழரை நாட்டுச் சனியன்" என்ற பட்டம் அளிக்கக் கூடு மாதலால் அதற்கு முன்பே பதவியிலிருந்து விலக்கி விடும்படி மாட்சிமை தங்கிய அரசருக்கு மனுச் செய்து கொள்வேன்.

சியாங்-கே-ஷேக் (தம்பதிகள்)

"ஆயுதமில்லாமல் ஜயிப்பதெப்படி?" என்று ஒரு நாடகம் எழுதி அதில் நாங்கள் நடிக்கப் போகிறோம்.

ஸர் ஆர்தர் ஹோப்

சென்னை நகருக்கு எதிரிகளால் ஆபத்து ஏற்படுமா, ஏற்படாதா என்பதைப் பற்றி நான் ஜோஸியம் சொல்லப் போவதில்லை.

சினிமா முதலாளி

தேசத்தில் துணிப் பஞ்சம் ஏற்பட்டு வருவதை உத்தேசித்து என் படங்களில் நடிக்கும் ஸ்திரீ நக்ஷத்திரங்களுக்குக் குறைந்த அளவு துணி தரிக்கும் பாகங்களையே கொடுக்கச் சொல்வேன். பருத்திப் பஞ்சம் ஏற்படாதிருக்க மெல்லிய சல்லாத் துணிகளையே அணியச் செய்வேன்.

வேலையற்ற ராஜீய வாதிகள்

1950ம் வருஷம் எப்ரல் மாதம் 20ந் தேதி பகல் போஜனத்தின்போது என்ன ஊறுகாய் தொட்டுக் கொள்வது என்பதைப் பற்றி யுத்தம் முடியும் வரையில் திட்டம் போடமாட்டேன்.

சர்க்கார் காரியதரிசிகள்

நாங்கள் ரயிலில் பிரயாணஞ் செய்யும் போது ஓடும் ரயில் சக்கரங்களின் சப்தம் "நீங்கள் பிரயாணஞ் செய்ய வேண்டியது அவசியந்தானா? நீங்கள் பிரயாணஞ் செய்ய வேண்டியது அவசியந்தானா?" என்று முறையிடுவது போலிருக்கிறது. ஆகையால் உதக மண்டலத்துக்கு நாங்கள் கோடைக்குப் போனால் நான்கு மாதங்களுக்குள் திரும்பி வந்து விடுவோம்.

ஸ்ரீமதி கிரகலக்ஷ்மி

பட்டுப் புடவைகள் விலை அதிகமாயிருப்பதால் இனி 120 ரூபாய் விலையில் புடவை வாங்கும்படி புருஷரைத் தொந்

நாவு செய்யப் போவதில்லை. 70, 75 ரூபா யில் எழெட்டுப் புடவைகள் மட்டுமே வாங்கிக் கொள்வேன்.

சட்டசபை அங்கத்தினர்

சட்டசபைக் கூட்டம் நடக்கும்போது தூங்குவதை ஒரு மணி நேரம் குறைத்துக் கொள்கிறேன்.

ஜனுப் ஜின்ன

ஹிந்து மகா சபைத் தலைவரைக் கை குலுக்கி, "எனப்பா, சவர்க்கார்! எங்கே கண்ணிலேயே காணும். நான் உன் வீட்டுக்கு வந்து சீட்டாடப் போகிறேன்" என்று கூறுவேன்.

அம்பிப் பயல்

கோலி விளையாடக் குழி தோண்டு வதற்கு இனிமேல் அப்பாவின் பவுண்டன் பேனவை ஒரு தரத்துக்கு மேல் எடுத்துக் கொள்வதில்லை.

ஸ்டாலின்

நான் ஆங்கில பாஷை கற்றுக் கொள் வதைப் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசி வருகிறார்கள். சில வருஷங்களுக்கு முன் பிரெஞ்சு பிரதம மந்திரி பாயின்கார் ஆங்கிலம் கற்றுக் கொண்டபோதும், அப்படித்தான் புரளிகள் கிளம்பின. அவர் லாயிட் ஜார்ஜைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பதைப் பச்சையாக எடுத்துச் சொல்வதற்காகவே ஆங்கில பாஷை கற்றுக் கொண்டதாகச் சொன்னார்கள். இப்பொழுது நான் சர்ச்சில் துரையிடம் இரண்டாவது முனையைப் பற்றி என் மனதிலுள்ளதை உள்ளபடி கூறுவதற் காகவே ஆங்கிலம் கற்பதாக வதந்திகள் கிளம்பியிருக்கின்றன. இதெல்லாம் சுத்தப் பொய். நான் சர்ச்சில் துரையின் சுருட் டழகைத் தினமும் வர்ணிக்கப் போகிறேன். அதற்காகவே ஆங்கிலம் கற்றுக் கொள்கிறேன்.

தஞ்சை மிராசுதார்கள்

நாங்கள் சர்க்கார் ஸப்ளை டிபார்டு மெண்டுக்கு எங்கள் தூயாத்தை கலம் 5 ரூபாய் வீதம் விற்க எப்பொழுதும் தயாரா யிருக்கிறோம்.

ரெஜினல்ட் மாக்ஸ்வெல்

இந்தியப் பாதுகாப்பின் பெயரால் நூறு அடக்குமுறைச் சட்டங்கள் இயற்றியானதும் ஒரு விழாக் கொண்டாடி விட்டுப் புதுச் சட்டங்கள் இயற்றுவதை நிறுத்தி விடுகிறேன்.

ஸர் முகம்மது ஊஸ்மான்

இப்பொழுது வைஸராய் சொல்வதற் கெல்லாம் தலையை யாட்டிக் கொண்டிருக் கிறேன். இந்த வருஷ முதல் அதுவும் ஆட்டப் போவதில்லை. ஏனென்றால் கழுத்துச் சுளுக்கிக் கொண்டிருப்பதால் இனிமேல் தலையாட்ட முடியாது.

உபாத்தியாயர்

காகிதப் பஞ்சத்தை உத்தேசித்து மாண வர்களுக்குக் கோடைகால விடுமுறையின் போது போடுவதற்கு வீட்டுக் கணக்குகள் கொடுக்கப் போவதில்லை.

நான்

புது வருஷத் தீர்மானங்கள் செய்யும் கெட்ட வழக்கத்தை நிறுத்திக் கொள்ளப் போகிறேன்.

கடவுள்

ஏதோ நான் ஒருவன் இருக்கிறேன் என்பது உலக மகா ஜனங்களுக்கு ஞாபக மிருக்கும்படியாக நான் தினசரி மூன்று தடவை அவர்களைப் பிரார்த்தித்து வருவேன்!

## திருந்திய விதம்!



"ஒரு முறை நானும் என் சிநேகிதனும் ஒருவருக்கொருவர் தங்கள் தங்கள் குற்றங் களைச் சொல்லித் திருத்திக்கொள்வதென்று தீர்மானித்தோம்."

"பின்பு என்ன ஆயிற்று?"

"ஒருவருக்கொருவர் ஐந்து வருஷங்கள் பேசவில்லை!"



வாலாயமான
பழைய கடை

நெம்பர்
83
இதுதான்

எஸ்·ஆர்·பீ·குப்புசாமி அய்யர் & ஸன்·




## கலியாண காலம்

கலியாணம் செய்பவர்களுக்குண்டாகும் கவலைகளுக்கு கணக்குண்டோ? ஆடையைப் பற்றிய கவலைகள் வரையில் நீக்குவது எமது பொறுப்பு. நல்ல பொருள்தானா? நீடூழி உழைக்குமா? நிறம் குன்றுமலும் மாறுமலும் நிற்குமா? விலை பெறுமா? எனும் பல கவலைகளை அறவே ஒழித்து, எமது சொல்லில் நம்பிக்கையை நிறுத்தி, எம்மிடம் தேவையான பொருள்களை வாங்குவதினால், உங்களுக்கு என்றும் அதிருப்தி ஏற்படாது. அதிருப்திக்குக் காரணமே முணு முணுத்தலும் முகக் கோணலும்.

## விவாஹ சமயம்

விவாக சமயத்தில் முணுமுணுத்தலும் முகக்கோணலும் இருக்கலாமோ? எமது பொருள்களைப்பற்றி ஒருவரும் குறைகூற இடந்தராததுமன்றி பலரும் ஜொலிக்கும்படியான வன்மையுடையனவா யிருக்கின்றன. "ஓ! இது புது மாதிரி!" "இத்தனை அழகியது இது வரையில் பார்த்ததே யில்லை!" "எங்கே வாங்கினீர்கள்?" "என்ன விலை?" எனும் வார்த்தைகளை விவாஹ சமயத்தில் எழுப்பக் கூடிய சேலைகள், பாவாடை, தாவணிகள், பெங்கால் பிரிண்டட் சேலைகள், ரவிக்கைகள், ஜம்பர்கள், பட்டு ஜரிகை துப்பட்டாக்கள், வேஷ்டிகள், பல திணுசு சுதேசி ஸில்க் ரகங்கள் மடிகள் எங்கள் கடையில்தான் கிடைக்கும். ஒவ்வொன்றிற்கும் உத்திரவாதமும் உறுதிமொழியும் உடனிருக்கின்றன.

## முகூர்த்த வேளை

முகூர்த்த வேளை தவறாமலிருக்க எவ்வளவு ஜாக்கிரதை வேண்டும்? அதைப் போலவே எமது உறுதிமொழிகள் தவறாதிருக்க வேண்டிய ஜாக்கிரதைகளை நாங்களும் கவனித்து வருவதால் 42 வருஷகாலமாக எங்களையும் எமது பொருட்களையும் பலர் உகந்து ஆதரித்து வருகின்றனர்.

**S. R. B.**

**குப்புசாமி அய்யர் & ஸன்**

(Formerly S. R. பாலுசாமி அய்யர் & ஸன்ஸ்)
மதுரை, பனாரஸ், கோல்லேகாலம், காஞ்சிவரம்,
பட்டு ஜவுளி வியாபாரிகள்

83, நயினியப்ப நாயக்கன் தெரு,
பார்க் டவுன், மதராஸ் :: போன் நெ. 3506

230, கீழமாரெட் தெரு, மதுரை. போன் நெ. 36

# தீரர் சத்தியமூர்த்தி

"கல்கி"

## 2

குறுக்குக் கேள்வி கேட்கும் எதிராளிகளுக்குச் சடக் சடப் பதில் சொல்லி வாயடக்குவதில் சத்தியமூர்த்திக்கு ஈடு சத்தியமூர்த்தியேதான். எவ்வளவு சங்கடமான நிலைமையிலும் ஏதாவது சாதுர்யமாய்ப் பதில் சொல்லிச் சமாளித்துக் கொள்வார். ஸ்ரீ சத்தியமூர்த்தி அரசியலில் புகுந்து அடியோடு டாக்டர் பெஸண்டு அம்மையையும் அவருடைய கோஷ்டியாரையும் மிதவாதிகளையும் தாக்கி அவர்களுக்கெல்லாம் செல்வாக்கு இல்லாமல் செய்துவிட்டா ரல்லவா? இதற்கெல்லாம் காலப் போக்கும் அவருக்கு உதவி செய்தது. ஆனால் காலப் போக்குக்கு எதிராகவும் அவர் தமது வாக்கு வன்மையை உபயோகிக்கப் பின் வாங்குவதில்லை. புதிய சட்டசபைகளைக் கைப்பற்றிச் "சிங்கத்தை அதனுடைய குகையிலேயே தாக்கி அதனுடைய பிடரி மயிரைப் பிடித்து உலுக்க வேண்டும்" என்று ஸ்ரீ சத்தியமூர்த்தி கர்ஜனை செய்து வந்த சமயத்தில் மகாத்மா காந்தி தமது மூவகை பகிஷ்காரத் திட்டத்துடன் இந்திய அரசியலில் பிரவேசித்தார். அதாவது சட்டசபைகளையும், கோர்ட்டுகளையும், கலாசாலைகளையும் பகிஷ்காரம் செய்ய வேண்டுமென்று சொன்னார். ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு இது பிடிக்கவில்லை. ஒரு சமயம் மன்னார்குடியில் மகாத்மாவின் [illegible] திட்டத்தைத் தாக்கி வந்த போது, "காந்தி சொல்கிறான்" என்று ஏக வசனத்தில் குறிப்பிட்டு விட்டார். ஒருவேளை இது வாய் தவறி வந்ததா யிருக்கலாம். தமிழ் நாட்டில் "காந்தி பைத்தியம்" அதிவேகமாகப் பரவி வந்த காலம் அது. கூட்டத்தில் சிலருக்குப் பொறுக்கவில்லை. ஸ்ரீ சத்தியமூர்த்தி பேசும்போது குறுக்கே பேசுவதற்கு அவர்களுக்கு எவ்வளவோ பயமா யிருந்தாலும், தங்களையும் மீறி, "ஏக வசனமாய்ப் பேசக்கூடாது!" என்று கூச்சல் போட்டார்கள்.

ஸ்ரீ சத்தியமூர்த்தி அந்த நிலைமையைச் சமாளித்த விதம் ரொம்பவும் அதிசயமானது. யோசிப்பதற்கு ஒருகணம் அவகாசம் கூட அவர் எடுத்துக் கொள்ளவில்லை. பளிச்சென்று பதில் கூறினார்:—

"ராமன் வனம் சென்றான் என்று சொல்கிறோம். கண்ணன் வெண்ணெய் திருடினான் என்று சொல்கிறோம். இதனால் ராமனையும் கிருஷ்ணனையும் நாம் அவமதிக்கவில்லை. ராமனையும் கிருஷ்ணனையும்போல் காந்தியை நான் அவதார புருஷனாக மதிக்கிறேன்!"

இதைக் கேட்டதும் கூட்டத்தில் உண்டான மகத்தான கரகோஷம் அவரிடம் ஏற்பட்டிருந்த அதிருப்தியை யெல்லாம் பறக்க அடித்து விட்டது.

ஸ்ரீ சத்தியமூர்த்தி பொதுஜன மனப்பான்மையை அறிந்து நடக்கும் ஆற்றல் உள்ளவர். மிதவாதிகள் விஷயத்திலும், ஜஸ்டிஸ் கட்சியார் விஷயத்திலும் கையாண்ட முறையை மகாத்மாவின் விஷயத்தில் கையாளுவது பெரிய பிசகாகும் என்பதை விரைவிலேயே அவர் அறிந்தார்.

உண்மையாகவே, மகாத்மா காந்தியினிடம் அவருடைய மரியாதையும் பக்தியும் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. இன்னும் மகாத்மாவிடம் பழகப் பழக அவருடைய மோகன சக்திக்கு வசப்பட்டு அவரிடம் அன்பு கொள்ளவும் தொடங்கினார்.

* * *

சமீபத்தில் ஒரு தடவை ஸ்ரீ சத்தியமூர்த்தி வட நாட்டுக்குப் போய்விட்டுத் திரும்பினார். வரும்போது வர்தாவில் இறங்கி மகாத்மாவைப் பார்த்து விட்டு வந்தார். வந்து கொஞ்ச நாள் வரையில் ஒரே மகாத்மா மயமாக இருந்தார். "என்னதான் சொல்லு; மகாத்மா என்றால் மகாத்மாதான்! அவருக்கு எவ்வளவு வேலை? எவ்வளவு தொல்லை? என்னைப் பார்த்ததும், 'லக்ஷ்மி சௌக்யமா?' என்று கேட்டாரே? குழந்தையைப் பற்றி ஞாபகம் வைத்துக் கொண்டு கேட்பதென்றால், — மகாத்மாவைத் தவிர வேறு யாரால் முடியும்?" என்று சொல்லிச் சொல்லிப் பூரித்துப் போனார்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் செல்வப் புதல்வியின் பெயர் லக்ஷ்மி என்று நேயர்கள் அறிந்திருக்கலாம். மகாத்மா சௌ. லக்ஷ்மியைப்

பற்றிக் கேட்டுவிட்டதற்காக ஸ்ரீ சத்தியமூர்த்தி இவ்வளவு பரவசமடைகிறாரே என்று அப்போது எனக்குச் சிறிது வியப்பாகத்தானிருந்தது. இந்த வியப்பு திருச்சி சிறையிலே மாறிற்று. இந்திய சுயராஜ்யத்துக்கு அடுத்தபடியாக ஸ்ரீ சத்தியமூர்த்தியின் உள்ளத்தின் ஆசையை யெல்லாம் கொள்ளை கொண்டவள் லக்ஷ்மி என்று அங்கே தெரிந்து கொண்டேன். லக்ஷ்மி வெள்ளிக்கிழமை ‘இண்டர்வியூ’வுக்கு வருவதாயிருந்தால், இவர் புதன்கிழமை முதலே ‘லக்ஷ்மி நாளன்று வருகிறாள்!’ என்று பார்த்தவர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டிருப்பார். வியாழக்கிழமை இரவு, சாதாரணமாய் ஒரு மணிக்கு வருகிற தூக்கம் கூட அவருக்கு வராது. வெள்ளிக்கிழமை காலையிலிருந்து இருப்புக் கொள்ளாத பரபரப்பு. சிறை வாசலில் லக்ஷ்மி வந்தாயிற்று என்று கேட்டதும், பிளாக்கிலிருந்தே ‘லக்ஷ்மி!’ என்று கூவிக்கொண்டு விரைந்து போவார்.

லக்ஷ்மியைப் பற்றி மகாத்மா விசாரித்ததில் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஏன் அவ்வளவு குதூகலம் என்பதை அப்போது நன்கு தெரிந்து கொண்டேன்.* மகாத்மாவினுடைய அநேக பெருமைகளில் இதுவும் ஒன்று. சிநேகிதர்களுடைய தேக சௌக்கியத்தைப் பற்றியும்‘ அவர்களுடைய குடும்ப யோக க்ஷேமங்களைப் பற்றியும் ரொம்பவும் கவலை யெடுத்துக் கொள்வார். 1941-ல் ஸ்ரீ சத்தியமூர்த்தி சிறையிலிருந்து வந்ததும் காங்கிரஸ் திட்டத்தை மாற்றும்படி பிரசாரம் செய்யத் தமக்குப் பேச்சு சுதந்திரம் வேண்டும் என்று மகாத்மாவுக்கு ஒரு பெரிய கடிதம் எழுதினார். அதற்கு மகாத்மா, “பேச்சு சுதந்திரம் உங்களுக்குத் தாராளமாக உண்டு” என்று சொல்லிவிட்டு, ஆனால் “உங்களுடைய தேக ஆரோக்கியம் எப்படி யிருக்கிறது? அதை முக்கியமாய்க் கவனிக்கவும். உடம்பைப் பார்த்துக்கொண்டு எது வேணுமானாலும் செய்யுங்கள்” என்று பதில் எழுதினார்.

* * *

மகாத்மாவிடம் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் பக்தி வளர்ந்து வந்ததுபோலவே, மகாத்மாவுக்கும் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் திறமையில் மரியாதை வளர்ந்து வந்தது. ஒரு சமயம் காந்தி மகான் வேறு யாருக்கும் கொடுக்காத ஒரு தனிச் சிறப்பை ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு அளித்தார். “என் இஷ்டத்துக்கு விடுவதாயிருந்தால், சட்டசபை வேலைக்கு ஸ்ரீ சத்தியமூர்த்தி ஒருவரை மட்டும் நியமித்து அனுப்பு



[ இந்திய சுயராஜ்யத்துக்கு அடுத்தபடியாக ஸ்ரீ சத்தியமூர்த்தியின் உள்ளங் கவர்ந்த குழந்தை சௌ. சுப்புலக்ஷ்மி. ]

*இதை எழுதிய பிறகு கல்யாணக் கடிதம் கிடைத்தது. அதிலிருந்து லக்ஷ்மியின் முழுப் பெயர் சௌ. சுப்புலக்ஷ்மி என்று தெரிந்தது. தகப்பனார் குறிப்பிட்ட ஏப்ரல் 23-ந் தேதியிலேயே பெண்ணுக்குத் திருமணம் நடைபெறுகிறது என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். நேயர்களின் சார்பாக மணமக்களுக்கு மனமார்ந்த வாழ்த்துக்கள் கூறுகிறேன்.

வேன்!" என்றார். இதிலிருந்து சத்திய மூர்த்தியின் சட்டசபை வேலையை மகாத்மா எவ்வளவு தூரம் மதித்தார் என்று அறியலாம். சட்டசபைத் திட்டத்தை ஓரளவு மகாத்மா சகித்துக் கொள்வதற்குக் காரணமாயிருந்ததே ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வேலைத்திறம் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் மகாத்மாவின் ஆரம்ப பயம் ஓரளவு உண்மையே யாயிற்று. காங்கிரஸ்காரர்கள் புகுவதால் சர்க்காரின் சட்ட சபைகளுக்கு மதிப்பு அதிகமாகுமென்று மகாத்மா சொன்னார். அவ்விதமே நடந்தது. முக்கியமாக, ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வேலை காரணமாகச் சட்டசபைகளின் மதிப்பு உயரத்தான் செய்தது. அதற்கு முன் சட்ட சபை நடவடிக்கைகளையே கவனியாதவர்கள் எல்லாம் தினசரிகளில் சட்டசபைப் பத்திகளை ஆவலுடன் கவனிக்கத் தொடங்கினார்கள். அவர்களில் நானும் ஒருவன்.

1921-ம் ஆண்டிலும் அதற்குப் பிறகு சுயராஜ்யக் கட்சி ஆரம்பமானபோதும் தேசத்தில் இன்னும் பலரைப்போல் நானும் ஸ்ரீ சத்தியமூர்த்தியிடம் கோபம் கொண்டிருந்தேன். "மகாத்மா உலகத்துக்கே ஒரு புதிய வழியைக் காட்டப் போகிறார். அவருக்கு விரோதமாக நம்மூர்க்காரர் ஒருவர் பேசுகிறாரே?" என்று எங்களுக்கு எரிச்சலாயிருந்தது. ஸ்ரீ சத்தியமூர்த்தி சட்டசபையில் செய்த அபார வேலையைப் பார்க்கப் பார்க்க, ஒருவாறு கோபம் மாறி அவர்மேல் மதிப்பும் மரியாதையும் கொள்ளத் தொடங்கினேன்.

* * *

சென்னைச் சட்டசபையில் இருந்த வரையில் ஸ்ரீ சத்தியமூர்த்தி பெரும்பாலும் ஜஸ்டிஸ் கட்சிக்குக் குழி வெட்டும் வேலையிலேயே ஈடுபட்டிருந்தார். இந்தக் குழி வெட்டும் வேலையானது வெகு காலம் வரையில் அவரை விடவேயில்லை. ஒவ்வொரு தேர்தலின் போதும், "இந்த வகுப்பு துவேஷ ஜஸ்டிஸ் கட்சியை ஆழமாகக் குழிதோண்டிப் புதைப்போம்" என்று கர்ஜிப்பார். தேர்தலில் ஜயமடைந்ததும், "ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டோம்!" என்பார். மறுபடியும் மறுபடியும் அந்தக் கட்சி முளைத்துக்கொண்டு தானிருக்கும். ஸ்ரீ சத்தியமூர்த்தியும் சலிக்காமல் குழி தோண்டிப் புதைத்துக் கொண்டிருப்பார்.

1930-ம் வருஷத்து உப்பு சத்தியாக்கிரஹத்தின் போது ராஜாஜி ஸ்ரீ சத்தியமூர்த்தியின் கையைப் பிடித்துச் சிறைக்கு அழைத்துக் கொண்டு போனார். அதிலிருந்து தமிழ் நாட்டு தேசத் தொண்டர் அநேகருக்கு அவர் மீதிருந்த அவநம்பிக்கை யெல்லாம் நீங்கிற்று. "சத்திய மூர்த்தி வெறும் பேச்சுக்காரர்" என்ற பேச்சும் அடிபட்டுப் போயிற்று.

1933-ல் மறுபடியும் ஸ்ரீ சத்தியமூர்த்தி "கிராமப்பஞ்சாயத்துச் சபையிலிருந்து இந்திய சட்டசபை வரையில் எல்லா ஸ்தானங்களையும் காங்கிரஸ்காரர்கள் கைப்பற்ற வேண்டும்" என்னும் தமது கொள்கையைப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். டாக்டர் அன்ஸாரி, ஸ்ரீ புலாபாய் தேசாய், டாக்டர் பி. வி. ராய் முதலியவர்களும் இந்த இயக்கத்தில் கலந்து கொண்டார்கள். கடைசியாக, காங்கிரஸே அதை ஒப்புக்கொண்டது. 1934-ல் நடந்த இந்திய சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் வாதிகள் பிரமாதமான உற்சாகத்துடன் ஈடுபட்டார்கள்.

சென்னை நகரில் ஜஸ்டிஸ் கட்சியின் சிறந்த வாசாலகரான ஸ்ரீ எ. ராமசாமி முதலியாருடன் போட்டி போடும் பெருமையும் உரிமையும் ஸ்ரீ சத்தியமூர்த்திக்குக் கிடைத்தன. அப்போது அவர் நடத்திய தேர்தல் முயற்சியைக் கிட்ட இருந்து நான்





லிங்கம் & கம்பெனி

கோயமுத்தூர்

யாவருக்கும் சுபானு வருஷத்திய வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்வதுடன், விண்ணப்பித்துக் கொள்ளுவது என்னவென்றால் சரக்கு வாங்கு முன் கடைகாரரிடம் நம் "சப்ளை கன்பர்மேஷன் ஸ்லிப்" வாங்கிப் பார்த்து திருப்தி அடைந்த பின்னரே சரக்கை பெற்றுக் கொள்ளுங்கள். (வந்தனம்).

பார்க்கும்படி சேர்த்தது. அவருடைய சலியா உழைப்பின் மகிமையை அப்போதுதான் முழுமையும் நான் அறிந்து கொண்டேன்.

"என் அன்பார்ந்த சகோதர சகோதரிகளே! ............" என்று அழைத்து அவர் செய்த பிரசங்க முழக்கங்கள் இன்னமும் சென்னையின் மேல்வான வெளியில் நிறைந்திருக்குமென்றே நினைக்கிறேன். ஒரு நாளைக்கு நாலைந்து பொதுக் கூட்டங்களில் அவர் பேசுவது சர்வ சாதாரணம்.

கூட்டங்களில் பேசுவது மட்டுமல்ல; தனித் தனியாக வோட்டர்களின் வீடு தேடிச் சென்று அவர் வோட்டுக் கேட்ட விதம் தேசத் தொண்டர்களுக்கெல்லாம் ஓர் அபூர்வ உதாரணமாயிருந்தது.

எங்கேயோ ராயபுரத்தின் ஒரு மூலையில் ஒரு கிராமணியாரின் வீட்டில் ஒரு மூதாட்டிக்கு வோட்டு இருக்கும். அந்த வீட்டைத் தேடிக் கொண்டு ஸ்ரீ சத்தியமூர்த்தி போவார். பின்னோடு வருகிறவர்கள் பேசட்டுமென்று காத்திருக்க மாட்டார். வோட்டர் பெண்மணி வாசலில் வந்ததும் ஆரம்பித்து விடுவார் :—

"அம்மா! நான்தான் சத்தியமூர்த்தி. காங்கிரஸ் மகா சபையின் கட்டளையைச் சிரமேற் கொண்டு இந்திய சட்ட சபைக்கு நிற்கிறேன். உங்களுடைய வோட்டை அபேட்சிக்கிறேன். எனக்கு உங்கள் வோட்டைக் கொடுத்தால் இந்தியா சுயராஜ்யமடைவதற்காக அல்லும் பகலும் அனவரதமும் பாடுபடுவேன்" என்று விநயமாகத் தெரிவித்துக் கொள்வார். இவ்விதம் அந்தத் தேர்தலின் போது இந்திய சட்டசபை வோட்டர் ஒவ்வொருவரையும் அநேகமாக அவர் நேரில் பார்த்துச் சொல்லியிருக்கிறார் என்றால், ஸ்ரீ எ. ராமசாமி முதலியாரை இருந்த இடம் தெரியாமல் அடித்துத் தேர்தலில் மகத்தான வெற்றியடைந்ததில் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

• • •

ஸ்ரீ சத்தியமூர்த்தி இந்திய சட்டசபைக்குப் போன பின்னர், அவருடைய திறமை இந்தியா முழுவதிற்கும் தெரியலாயிற்று. தென்னாட்டின் கௌரவமே ஒருபடி உயர்ந்தது.

எதிராளிகளின் வாயடைத்துப் போகும்படி காரசாரமான கேள்விகளைக் கேட்டு, பளிச்சுப் பளிச்சென்று பதில் சொல்லும் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் திறமை இந்திய சட்டசபையில் வெகு நன்றாகச் சோபித்தது.



"லக்ஷ்மி சௌக்யமா?" என்று மகாத்மா விசாரிக்க மறப்பது கிடையாது.

அப்போது வைஸ்ராய் நிர்வாக சபையில் சட்ட இலாகா அங்கத்தினராயிருந்தவர் ஸர் என். என். சர்க்கார். இவர் வங்காளத்தின் பிரசித்த வக்கீல்; மாஜி அட்வகேட் ஜெனரல்; சென்னையில் ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயருக்கு எவ்வளவு பிரபலமோ அவ்வளவு பிரபலம் வங்காளத்தில் அடைந்தவர்.

ஒரு சமயம், ஸ்ரீ சத்தியமூர்த்தி பேசும் போது "சட்ட மெம்பர் தமது சட்ட ஞான மனச்சாட்சியை உபயோகப் படுத்தவேண்டும்!" என்றார்.

"எனக்கு மனச்சாட்சி உண்டென்று கனம் அங்கத்தினர் குற்றம் சாட்டுகிறாரா?" என்று சாதுர்யமாய்க் கேட்டார் என். என். சர்க்கார்.

"தப்புத்தான்; மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்!" என்று உடனே பதில் கொடுத்தார் சத்தியமூர்த்தி.

பொக்கிஷ மெம்பர் ஸர் ஜேம்ஸ் கிரிக் யமகாதகர் என்று பெயரெடுத்தவர்; இப்போது பிரிட்டிஷ் மந்திரி சபையில் யுத்த மந்திரியாக விளங்குகிறார். அவரைச் சத்தியமூர்த்தி படாத பாடு படுத்தி வைத்தார்.

ரூபாய் நாணயத்தைப் பற்றி ஸ்ரீ சத்தியமூர்த்தி உப கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கையில், "இந்த விஷயத்தைப் பற்றிக் கவர்ன்மெண்டார் நிபுணர்களின் அபிப்பிராயத்தைக் கலந்தார்களா?" என்றார்.

ஸர் கிரிக் :—நான் ஒரு நிபுணன் என்று கனம் அங்கத்தினர் ஒப்புக் கொண்

டால், நிபுணரால் ஆலோசிக்கப்பட்டது என்று சொல்லலாம்.

**சத்தியமூர்த்தி :**—ஆமாம்; துரதிர்ஷ்ட வசமாக நீர் ஒரு நிபுணர்தான்!

இந்த மாதிரி எத்தனையோ வாக்கு பாணங்களை ஸ்ரீ சத்தியமூர்த்தி விடுத்திருக்கிறார்.

* * *

**வா**க்குப்போர் என்று வரும்போது எதிராளி கடைசி வார்த்தை சொல்வதற்கு ஸ்ரீ சத்தியமூர்த்தி ஒருநாளும் விடுவதில்லை. இவருடைய வார்த்தைதான் கடைசி வார்த்தையாயிருக்கும்.

அடக்குமுறைச் சட்டங்களை ரத்து செய்ய வேண்டுமென்று காங்கிரஸ் கட்சியார் கொண்டு வந்த மசோதாவின் பேரில் ஸ்ரீ சத்தியமூர்த்தி பேசிக் கொண்டிருந்தார். அப்போது நிர்வாக சபையிலுள்ள இந்திய அங்கத்தினரைத் தாக்கத் தொடங்கினர்.

**என். என். சர்க்கார் :**—நீங்களும் மந்திரியானல் அடியோடு மாறிப்போவீர்கள்.

**சத்தியமூர்த்தி :**—அப்படி மாருமலிருக்க உங்களுடைய உதாரணமே எச்சரிக்கையாயிருக்குமே! .........

**அக்கிராசனர்** (ஸர் அப்துர் ரஹீம்):—தனிப்பட்ட மனிதர்களைத் தாக்குவது ரொம்ப அதிகமாகி வருகிறது.

**என். என். சர்க்கார் :**—நான் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. இன்னும் கொஞ்சம் தாக்கட்டும். (சிரிப்பு)

**சத்தியமூர்த்தி :**—அப்படியானல் நிறுத்திவிடுகிறேன். நான் சொல்வது எதுவும் அவருக்கு உறைக்கவில்லை யென்று தெரிகிறது! மனுஷர் கொஞ்சம் கரணையுள்ளவர் என்று நினைத்திருந்தேன்!

மேற்கண்ட விவாதத்தின்போதே பின்னுல் ஒரு தடவை என். என். சர்க்காருக்கும் சத்தியமூர்த்திக்கும் போராட்டம் மூண்டது.

"மாகாணங்களில் மந்திரிகளின் சர்க்கார் ஏற்படும்போது, அந்த மந்திரிகளுக்கு எதிராகப் பிரசாரம் செய்து விரோதம் உண்டு பண்ணிவிட்டால், ஒரு மந்திரி சபை மாறி இன்னொரு மந்திரி சபை எப்படி ஏற்பட முடியும்?" என்பது ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வாதங்களில் ஒன்று.

**சத்தியமூர்த்தி :**—நல்லது; நானைக்கு நான்தான் மந்திரியாகிறேன். எப்போதும் மந்திரியாகவே இருக்க விரும்புகிறேன். எனது கனம் நண்பர் (என். என். சர்க்கார்) என்ன செய்வார்? என்பேரில் 'விரோதம்' 'துவேஷம்' உண்டு பண்ணுதபடி எப்படி எதிர்ப் பிரசாரம் செய்வார்?

**சர்க்கார் :**—'எனது நண்பர் ரொம்ப தங்கமான மனுஷர்; ஆனல் தப்புகள் செய்திருக்கிறார்' என்று சொல்வேன்.

**சத்தியமூர்த்தி :**—அப்படிச் சொன்னுல் வோட்டே கிடைக்காது. (சிரிப்பு)

**சர்க்கார் :**—இது வோட்டுப் பிடிக்கும் வேலை யென்று அப்போதே சந்தே(கி)த்தேன்.

**சத்தியமூர்த்தி :**—ஆமாம்; ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள நாங்கள் வோட்டுப் பிடிப்பவர்கள்தான்; வைஸ்ராய்கள் — கவர்னர்களுடைய வால் பிடிப்பவர்கள் அல்ல! (சிரிப்பு)

(தொடரும்)


கல்யாண காலங்களுக்கு ஏற்ற சகலவிதமான புடவை ஜவுளி தினுசுகளும் ராதா ஸில்க் எம்போரியத்தில் வந்து குவிந்துள்ளன. மதராஸில் பட்டுப் புடவைகளுக்குப் பிரசித்தி பெற்ற கடை. கல்யாண காலங்களுக்கு நீங்களும் ராதா ஸில்க் எம்போரியத்திற்கு வந்து பாருங்கள். எங்கள் சொந்தக் கைத்தறிகளில் நெய்த அழகிய பட்டுப் புடவைகளும் வேஷ்டி தினுசுகளும் ரக ரகமாயிருக்கின்றன.

(எங்கள் கொள்ளேகாலம் டிஷ்யூ சேலைகள் ஓர் ஸ்பெஷல் ரகம்)

ராதா ஸில்க் எம்போரியம்

1/14, ஸந்நிதித் தெரு, (டெலிபோன் : 8016) மயிலாப்பூர், மதராஸ்.

பிராஞ்சு : 37, பெரிய தெரு, கும்பகோணம்.

புரொப்ரைட்டர் : R. K. T. செட்டியார்



# பூந்தோட்டம்




ஆசிரியர்
ரவீந்திர நாத் டாகுர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி


## மூன்றும் அத்தியாயம்

“புஷ்பங்களை யார் கொண்டு வரச் சொன்னார்கள்?” என்று நீரஜா எரிச்சலுடன் கேட்டதும் ஸரளா சாந்தமாக, “ஆதித் அண்ணா!” என்றாள்.

“அவர் ஏன் வரவில்லை?”

“நியூமார்க்கெட்டுக்கு அவசரமாகப் போக வேண்டிய காரிய மிருந்தது. டீ அருந்தி விட்டுப் போனார்.”

“அவ்வளவு அவசரம் என்னவோ?”

“நேற்று இரவு ஆபீஸ் அறையின் பூட்டு உடைக்கப்பட்டுப் பணம் களவு போனதாகச் சமாசாரம் வந்தது.”

“இந்தப் பக்கம் வருவதற்கு ஐந்து நிமிஷங் கூடவா அவருக்கு அவகாசம் கிடைக்க வில்லை? அதிசயந்தான்!”

“நேற்று உனக்கு உடம்பு ஜாஸ்தியாக இருந்தது. விடியும் நேரத்தில் நீ கண்ணயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாய். ஆகையால் அவர் கதவு வரைக்கும் வந்து திரும்பிப் போய்விட்டார். ஒருவேளை மத்தியானத்திற்குள் தாம் திரும்பி வராவிட்டால் இந்தப் பூவை உன்னிடம் சேர்ப்பிக்கச் சொன்னார்.”

தினசரி வேலைகளை ஆரம்பிப்பதற்குமுன் பொறுக்கி எடுத்த மலர் ஒன்றை ஆதித்தன் தன் பத்தினியின் படுக்கையில் கொண்டு வைப்பது வழக்கம். நேரே தன் கையினாலேயே அவளுக்குப் புஷ்பத்தைச் சமர்ப்பிப்பதில் அதிக மதிப்பிருப்பதை அவன் ஏனோ உணரவில்லை? புனித கங்கையின் நீரானாலும், அது குழாய் மூலம் வருவதா யிருந்தால் அதற்கு மதிப்புக் குறைவுதானே?

நீரஜா புஷ்பத்தை அசட்டையாக ஒரு புறம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, “மார்க்கெட்டில் இந்தப் பூவுக்கு என்ன விலை தெரியுமா? அங்கே அனுப்பிவிடு. வீணாகப் பாழாக்கு வானேன்?” என்று சொல்லும்போதே அவளுடைய கண்டம் விம்மியது.

ஸரளாவுக்கு விஷயம் புரிந்தது. இதற்கு ஜவாப்பு சொல்லப் போனால் ரோஷம் அதிகமாகுமே ஒழிய மட்டுப்படாது. ஆகையால் பேசாமல் நின்று கொண்டிருந்தாள். சிறிது நாழிகை கழித்து நீரஜா, “இதன் பெயர் என்ன? தெரியுமா?” என்றாள்.

“தெரியாது” என்று ஸரளா சொல்லி விட்டிருக்கலாம். ஆனால் ஸரளாவும் பெண் ஜன்மந்தானே? அவளுக்கும் ரோஷம் பொத்துக் கொண்டது. “அமாரிலஸ்” என்றாள்.

நீரஜா, அனாவசியமான கோபத்துடன் “ரொம்பத் தெரியும் உனக்கு? இதன் பெயர் ‘கிராண்டிப்ளோரா’ அல்லவா?” என்று சொல்லி அவளை மட்டந் தட்டினாள்.

ஸரளா சாந்தமான குரலில், “இருக்கலாம்” என்றாள்.

“இருக்கலாமென்றால் என்ன அர்த்தம்? எனக்குத் தெரியாதென்று சொல்லேன்” என்றாள் நீரஜா.

நீரஜா வேணுமென்றே தவறான பெயரைச் சொல்லி வலுச் சண்டைக்கு இழுக்கிறாளென்று ஸரளா தெரிந்து கொண்டாள். பிறருக்கு எரிச்சலை மூட்டித் தன் எரிச்சலை ஆற்றிக்கொள்ளும் வழி இது. மேலே பதில் சொல்லாமல் தோல்வியை ஏற்று ஸரளா வெளியே செல்லுகையில் நீரஜா அவளை மீண்டும் கூப்பிட்டு, “இந்தா, இதைக் கேட்டுவிட்டுப் போ .... காலை நேரமெல்லாம் என்ன செய்து கொண்டிருந்தாய்? எங்கே இருந்தாய்?” என்று கேட்டாள்.

“ஆர்க்கிட் குஞ்ஜத்தில்.”

நீரஜா பரபரப்படைந்து, “ஆர்க்கிட் குஞ்ஜத்திற்கு நீ அடிக்கடி போவதன் காரணம்



"எங்கேயோ?" என்று அதட்டுவதுபோல் கேட்டான்.

"பூத்த செடிகளைப் பெயர்த்துப் புதிதாக வேறிடத்தில் நடும்படி ஆதித் அண்ணா என்னிடம் சொல்லிவிட்டுப் போனார்."

நீரஜா, அதே அதட்டும் பாவனையில், "செடிகளைப் பற்றி உனக்கென்ன தெரியும்? எல்லாவற்றையும் பாழாக்கிவிடப் போகிறாய்! இந்த வேலையெல்லாம் ஹலாவுக்கு நன்றாகத் தெரியுமே. நான் சொல்லிக் கொடுத்திருக்கிறேன். அவனிடம் சொன்னால் செய்ய மாட்டானா?" என்றாள்.

இதற்குமேல் என்ன பதில் சொல்வது? நீரஜா சொன்ன வார்த்தைக்கு உள் அர்த்தம்:- நீரஜாவின் கீழ்தான் ஹலா நன்றாக வேலை செய்வான், ஆனால் ஸரளாவிடம் அவ்வாறு செய்யமாட்டா னென்பதே.

தோட்டக்காரனும் நன்றாக உணர்ந்து கொண்டிருந்தான் — இப்போதிருக்கும் யஜமானியின் ஆட்சியில் இட்ட வேலையைச் சரியாகச் செய்யாமல் இருப்பதே, பழைய யஜமானிக்கு ஸந்தோஷமாயிருக்குமென்று.

"மூடு, ஜன்னல் கதவை மூடிவிடு" என்றாள் நீரஜா.

ஸரளா கதவை மூடிவிட்டு, "இனிமேல் கொண்டு வரலாமா ஆரஞ்சுப் பழ ரஸம்?" என்றாள்.

"ஒன்றும் கொண்டுவர வேண்டாம் ... நீ போகலாம்."

ஸரளா திகைத்து போய், "மகரத்வஜம் சாப்பிடும் வேளை ஆயிற்றே" என்றாள்.

"அதுவும் இன்றைக்கு வேண்டியதில்லை. தோட்ட வேலை ஏதாவது நீ செய்ய வேண்டியது பாக்கி இருக்கிறதா?"

"ரோஜாக் கிளைகளை ஒட்டுப்போட வேண்டும்."

"அதற்கு இதுதான் காலமாக்கும்? இப்படிப்பட்ட மூளை உனக்கு யார் கொடுத்தார்கள்?" என்றாள்.

ஸரளா அடக்கமாகவே, "வெளியூர்களிலிருந்து எதிர் பாராமல் நிறைய 'ஆர்டர்'கள் வந்திருக்கின்றன. ஆகையால் எப்படியாவது வரப் போகிற மழைக் காலத்திற்குள் நிறையச் செடிகளை விருத்தி செய்ய வேண்டுமென்று அவர் முயற்சி செய்கிறார். நானும் வேண்டாமென்று தடுத்துப் பார்த்தேன்" என்றாள்.

"தடுத்தாயாக்கும்! சரி, போய், ஹலாவை இங்கே அனுப்பு."

ஹலாதான் வந்தான். "வர வர அழகாயிருக்கிறது! யஜமானனென்று எண்ணிக் கொண்டுவிட்டாயா என்ன? பாவம், ரோஜாக் கிளையைப் பதி போடுவதென்றால் உன் மெத்தென்ற கையை வலிக்கிறதாக்கும்! ஸரளாவை உனக்கு 'அஸிஸ்டெண்ட்'டாக வைத்துக் கொண்டிருக்கிறாயா? பாபு 'டவுனி'லிருந்து திரும்புவதற்குள் ரோஜாக் கிளைகளைப் பதி போட்டாக வேண்டும், தெரிகிறதா? ... இன்றைக்கு உன்னை விடப் போகிறதில்லை. குளத்தங்கரையில் ஒரு பக்கம் மணலைப் பரப்பி அதன் மேல் தழைகளைத் தூவித் தயாராக வை" என்று கட்டளையிட்டாள். அப்போது, நீரஜாவுக்கு, அந்த இடத்தில் படுத்த வண்ணம் அவன் ரோஜாப் பதிகளைச் சரிவர வைக்கிறானா வென்று பார்க்க வேண்டுமென்ற எண்ணம்.

யஜமானியின் கிருபையைச் சம்பாதிக்கும் நோக்கத்துடன் ஹலா சிரித்த முகமாகவே, "இந்தப் பித்தளைக் கலசத்தைப் பார்த்தீர்களா? கட்டக்கில் செய்த அபூர்வமான வேலைப்பாடு, அம்மணி. இதன் மதிப்பு உங்களுக்குத்தான் தெரியும் ... புஷ்பங்களைச் செருகி வைப்பதற்கு அர்த்தமாக இருக்கும்" என்றான் தன் கையிலுள்ளதைக் காட்டி.

"இதன் விலை என்னடா?" என்றாள் நீரஜா.

அவன் நாக்கைக் கடித்துக்கொண்டு, "போ அம்மா, இதற்கென்ன விலை சொல்வது? ஏழையாக இருந்தாலும் நான் அற்பனல்ல.

ங்களிடம் எவ்வளவு தின்றிருக்கிறேன்!'' என்றான்.

பிறகு அந்தக் கலசத்தை அவன் முக்காலியின் மேல் வைத்துவிட்டுப் பக்கத்திலிருந்த பழைய பாத்திரத்திலிருந்து புஷ்பங்களை எடுத்து அதில் அலங்காரமாக அடுக்கினான். நடையில் போகும்போது அவன், ''என் தங்கச்சி மகளுக்குக் கல்யாணம் ...... முன்னமேயே சொல்லியிருக்கிறேன் உங்களிடம். 'பாஜீபக்த்' (வங்கி) கவனமிருக்கட்டும், அம்மா! ...... பித்தளை நகை போட்டால் என்னைத் திட்ட மாட்டார்களா பின்னே மீட்டார்? இவ்வளவு பெரிய இடத்திலே தோட்டக்காரனாக இருப்பவன் வீட்டுக் கல்யாணமென்று எல்லாரும் மலைத்து இருக்கிறார்களே'' என்றான் தலையைச் சொறிந்துகொண்டே.

''சரிதான், போடா, பார்க்கலாம்'' என்றான் கிரஜா.

ஹலா போய்விட்டான்.

படுக்கையில் வேறு புறமாகத் திரும்பித் தலையணையில் முகத்தைச் சாய்த்துக்கொண்டு, ரோஷ்னி, ரோஷ்னி! நான் கூட இவ்வளவு அல்பமாகப் போய்விடுவேனா? இந்த ஹலாவின் மனைப்போல், இப்படி என் மனமும் குறுகலாகிவிட்டதே'' என்றாள்.

''சி! சி! யார் அப்படிச் சொன்னார்கள்?'' என்றாள் ஆயா ரோஷ்னி.

தனக்குத்தானே கிரஜா கூறிக்கொண்டான்:— ''என் பாழும் தலை எழுத்து, என்னைத்தான் இப்படி விலக்கி வைத்திருக்கிறதே, மறுபடியும் என் மனம் ஏன் இவ்வாறெல்லாம் அலைபாய்கிறது? எது எக்கேடு கெட்டால் என்ன? வேலைக்காரன் ஹலாகூட என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்கிறானோ? கெஞ்சிக் கூத்தாடி இனும்கூட அடித்துக் கொண்டு போய்விட்டான்...... அவனைக் கூப்பிடு, முன்னே! கண்டிக்காமல் விட்டால் அவனுக்குக் கிறுக்குத் தலைக்குமேல் ஏறி விடும் ...... மட்டந்தட்ட வேண்டும். ஒரு வேலையும் செய்வதில்லை.''

ஆனால் ஆயா ஹலாவைக் கூப்பிட எழுந்தபோது கிரஜா, ''இரு, இன்றைக்கு வேண்டாம்'' என்று தடுத்துவிட்டாள்.

## நான்காம் அத்தியாயம்

பிறகு, சற்று நாழிகைக்கெல்லாம், ரமேன் அங்கே வந்தான். அவன் அவளுக்கு மைத்துனன் முறை. ''மன்னி, அண்ணா என்னை அனுப்பினார். ஆபீஸில் இன்று வேலை அதிகமாம்; சாப்பாடு ஹோட்டலில் பார்த்துக் கொள்ளுகிறாராம்......திரும்பி வர நேரம் ஆகுமென்று சொல்லச்சொன்னார்'' என்றான்.

கிரஜா, சிரித்தாள்: ''சமாசாரம் சொல்லுகிற சாக்கில் இங்கே இரைக்க இரைக்க ஓடி வந்தாயாக்கும். ஆபீஸ் ப்யூன் எங்கே? செத்துப்போய்விட்டானா என்ன?'' என்றாள்.

''உன்னைப் பார்த்து விட்டுச் செல்வதைத் தவிர்த்து வேறு எந்த விதமான சாக்குமில்லை, மன்னி! ப்யூன் தடிப்பயலுக்குத் அது செல்வதின் முக்கியத்தைப் பற்றி என்ன தெரியும்?'' என்றான்.

''நீ கவனப் பிசகாகத்தான் இந்த அறைக்குள் நுழைந்தாய்.



எனக்குத் தெரியுமே. உங்கள் தோட்டக்காரி, பாவம், லதாகுஞ்ஜத்தின் நிழலில் எத்தனை நாழிகை காத்துக் கொண்டிருப்பாள்? முன்னே அவளைப் பார், போ."

"முதலில் நந்தவனத்தின் ராணியான உன்னைப் பேட்டி கண்டு காணிக்கை செலுத்தி விட்டுத்தானே அவளை நான் தேடப் போக வேண்டும், மன்னி" என்று சொல்லிக் கொண்டே தன் ஜிப்பாவின் மறைவிலிருந்து ஒரு கதைப் புஸ்தகத்தை வெளியே எடுத்து நீரஜாவின் கையில் கொடுத்தான்.

நீரஜா மகிழ் வெய்தி, "கண்ணீர்த்துளி! இந்தப் புஸ்தகந்தான் நான் வெகு நாளாகத் தேடியது. நீ இதைக் கொண்டு வந்ததற்காக, உன்னுடைய கற்பனையிலும் கனவிலும் கலந்துகொள்ளும் கூட்டாளியுடன் நீ சதா சர்வ காலமும் சிறப்புடனும் குதூகலத்துடனும் இருக்க வேண்டுமென்று வாழ்த்துகிறேன்" என்றாள்.

"மன்னி, ஒன்று கேட்கிறேன் ...... சரியாகப் பதில் தரவேண்டும்" என்றான் ரமேன்.

"சொல்லு."

"ஸரளாவுடன் இன்று உனக்குச் சண்டையா என்ன?"

"ஏன் அதைக் கேட்கிறாய்?"

"வரும்போது பார்த்தேன். அவள் குளத்தங் கரைப் படியில் மௌனமாக உட்கார்ந்திருந்தாள். ஸரளா சும்மா உட்கார்ந்திருந்ததை நான் ஒருநாளும் பார்த்ததே இல்லை. நான் 'என்ன ஒரு மாதிரியாக இருக்கிறாயே? மனத்தை எங்கே பறிகொடுத்துவிட்டாய்?' என்றேன். 'வெய்ய கானலில், வாடிய சருகு ஓடி மறையுமிடத்தில்தான்' என்றாள். 'புதிர் போல் இருக்கிறது நீ பேசுவது. தெளிவாகச் சொன்னால்தான் என் மூளையில் ஏறும்' என்றேன். 'அதற்குப் பிரத்தியேகமான பாஷை உண்டு' என்றாள். அப்போது 'நீ வேதனை கொள்ள வார்த்தை சொன்னது யாரோ?' என்ற பாட்டின் அடி என் கவனத்திற்கு வந்தது."

"வீண் வியாக்யானம் எல்லாம் வேண்டாம். நடக்க வேண்டிய விஷயத்தைச் சொல்லுகிறேன். என் பேச்சைத் தட்ட மாட்டேன் என்று சத்தியம் செய்."

"விஷயத்தைச் சொல்லுங்களேன்?"

"ஸரளாவைக் கல்யாணம் பண்ணிக்கொள். வயதான பெண். அவளைக் கட்டிக் கொண்டதனால் உனக்குப் புண்ணியம் உண்டாகும்."

"புண்ணியத்திற்கு நான் ஆசைப்படவில்லை பெண்மணியின் பேரில்தான் எனக்குக் கண் இதோ உடைத்துக் கூறிவிட்டேன், மன்னி உன்னிடம்."

"உனக்குத் தடை ஒன்றுமில்லை. ஆனா அவள் மனசு எப்படியோ?"

"நான் அதைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வில்லையே. என் கற்பனைகளில் மட்டும் பங்கு எடுத்துக் கொள்வாளாம். காதல் மனைவியாக ஆக முடியாதென்று சொல்லி யிருக்கிறாள்.'

நீரஜா ரமேனின் கையைப் பிடித்து கொண்டு, "ஏன் முடியாதாம்? முடிந்துதான் ஆகவேண்டும். நான் சாவதற்குள் உன் விவா கத்தைப் பார்த்தே தீருவேன். என் கோரி கைப்படி நடக்காவிட்டால் பிசாசாகப் பிறந்து உங்கள் இருவரையும் வாட்டி எடுக்கிறேன இல்லையா பாரேன்" என்று ஆவேசத்துடன் கூறினாள்.

நீரஜா இவ்வளவு ஆத்திரமாகக் கூறியதை பார்த்து ரமேன் பிரமித்துப் போய் சில நிமிஷங்கள் அவள் முகத்தையே நோக்கலானான். கடைசியில் தலை அசைத்து, "மன்னி, எனக்கு ஆஸ்தியோ பாஸ்தியோ ஒன்றுமில்லையே. காற்றி அடித்துக் கொண்டு வந்த பூண்டின் வித்து இடம் கிடைத்தால் வேரூன்றிவிடுகிறது அப்புறம் அதை ஒழிப்பதென்றால் யாரா ஆகும்?" என்றான்.

"இந்த வேதாந்த 'மெல்லாம் எனக் வேண்டியதில்லை. பெரியவள், நான் சொல்லு கிறேன். பேசாமல் கல்யாணம் பண்ணி கொள். காலம் கடத்தாதே. இந்த சித்திரை மாசமே ஒரு நல்ல நாள் பார்த்து வைக்கிறேன்."

"என் பஞ்சாங்கத்தில் வருஷம் முந்நூற்று அறுபத்தைந்து நாளும் சுப முகூர்த்தந்தான் நான் ஒரு 'தரம் ஜெயிலை எட்டிப் பார் திருக்கிறேனே. இப்போதுகூட என் கா அதன் பக்கமாகத்தான் இழுத்துச் செல்கிறது அந்தக் கோலத்திற்கும் மணக் கோலத்திற்கு வெகு தூரம். அவள் என் மனத்தில் நிறை திருக்கிறாள். அதுவே போதும்."

அப்போது ஸரளா வந்து 'ஹார்லிக்ஸ் கலந்துள்ள பாத்திரத்தை முக்காலி மீது வைத்து விட்டு யாருடனும் பேசாம வெளியே போவதைப் பார்த்தாள் நீரஜா "ஸரளா! போகாதே, இரு" என்று கூ னாள். ஸரளா பேசாமல் நாற்காலியி அமர்ந்தாள். (தொடரும்

# ஸௌத் இந்தியா பிக்சர்ஸ்

**1943 வருஷத்திய மகோன்னத சித்திரம்!**

○

☆ ஸ்ரீ ரேணுகா பிலிம்ஸாரின் ☆

# பாக்யலக்ஷ்மி

☆ நவீன சமூக தெலுங்கு பேசும் படம்

★ நாகையா ★ மாலதி ★
கிருஷ்ணன் ★ மதுரம்

முதலியோர் திறம்பட நடித்தது

○

## வெலிங்டன் - சென்னை

மற்றும் பல முக்கிய இடங்களிலும் வெகு
மும்மரமாக ஓடிக்கொண்டிருக்கிறது

ஆயிரக்கணக்கானவர் இடமின்றி திரும்புகின்றனர்

தினசரி 2 காக்ஷிகள் - 6-15, 9-30 மணிக்கு

வெள்ளி, சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் மாத்திரம்
:: பகல் காக்ஷி 2-30 மணிக்கு நடத்தப்படும் ::

## ஸௌத் இந்தியா பிக்சர்ஸ் லிமிடெட்

காரைக்குடி

# கல்யாணி

## —ஸரோஜா—

எனக்குச் சிறு வயதிலேயே கல்யாணமாகி விட்டது. புக்ககத்தில் நிறைய மனிதர்கள். அவர்கள் என்னைக் கல்யாணத்தில் படுத்தி வைத்த பாட்டை நினைத்தால் பயமாகத்தான் இருக்கிறது!

என் கணவருக்கு அந்தக் குடும்பத்தில் தனி மதிப்பு இருந்தது. தமிழ்ப் பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுது வார். இதையெல்லாம் நினைத்த போது எனக்குப் பெருமை அளவு கடந்து பொங்கிக் கொண்டிருந்தது. கல்யாணத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன்பு மாடி வராந்தாவில் திறந்த வெளியில் உட்கார்ந்து கொண்டிருந் தேன். என் மனம் அவரைப் பற்றித் தான் கனவு கண்டு கொண்டிருந்தது— அசைவில் பார்த்த அழகிய உருண்டை முகம், விசாலமான நெற்றி அதில் விழுந்து புரளும் கூந்தல், கண்களின் குறும்புத்தனத்தை மறைக்கும் கண் ணாடிகள், கதர் ஜிப்பா! 'நீ அதிர்ஷ்ட சாலி' என்று என் மனமே எனக்கு நற் சாட்சிப் பத்திரம் அளித்தது.

இப்படி மெய்மறந்த நிலையில் இருந்த போது என் கண்களைப் பின்புறமாக இரு கரங்கள் வந்து பொத்தி உணர்வு பெறச் செய்தன. குழந்தையின் கரங் கள்தான்! வளை அணிந்த கரம். நீண்ட அழகிய விரல்கள். கைகளை விடு வித்துக் கொண்டு திரும்பிப் பார்த் தேன். அவருடைய சாயலாகவே சிறுமி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அந்தப் பெண் ஆச்சர்யத்தால் வாயைத் திறந்த வண்ணம் என்னைப் பார்த்து விட்டு, "மன்னி! பாபு இதை உன் னிடம் கொடுக்கச் சொன்னான்" என்றாள் ஒரு கடிதத்தை நீட்டியபடியே.

அவளைப் பிடித்து இழுத்து என் மடியில் உட்கார வைத்துக் கொண் டேன்.

"ஆமாண்டி கண்ணே! உன் பெயர் என்ன?" என்று கேட்டேன். "கல் யாணி" என்று கொஞ்சிக்கொண்டே சொல்லிற்று அந்தப் பெண்.

"அண்ணாவிடமிருந்து கடிதம் கொண்டு வந்தாயே, நான் இங்கு இருப் பது உனக்கு எப்படித் தெரிந்தது?"

கல்யாணி முகவாய்க் கட்டையில் கையை வைத்துக் கொண்டாள்.

"இது தெரியாதா மன்னி? பாபு தான் பார்த்துச் சொன்னான். அதோ மொட்டை மாடியில் எங்காத்திலிருந்து பார்த்தால் தெரியலையா மன்னி?"

அவள் பேச்சும், குலுக்கும் என் மனதை மகிழ்வித்தது.

"அண்ணாவைப் போய்ப் பெயரிட்டுக் கூப்பிடுகிறாயே. கூப்பிடக் கூடாதடி கண்ணே" என்றேன்.

"பாபுவை அப்படித்தான் கூப்பிடு வேன். உன்னை வேண்டுமானால் மன்னி என்று கூப்பிடுகிறேன்" என்று பளிச் சென்று பதில் சொன்னாள்.

அவர் அனுப்பிய கடிதத்தைப் படிக்கக் கூட மனம் வராமல் அந்தப் போக்கிரிப் பெண்ணோடு பேசுவதி லேயே காலம் போய் விட்டது. அவளிட மிருந்து என்னை விடுவித்துக் கொள்ள கையில் இரண்டு லட்டுகளைக் கொடுத்து என்னை மீட்டுக் கொண்டேன். என் உள்ளத்தை அல்ல.

### 2

பரிவுடன் கூடிய அவர் முகத்துடன் கல்யாணியின் களங்கமற்ற முகமும் என்னைப் பிறந்தகத்தில் இன்பத்தில் ஆழ்த்தி வந்தது. கதை எழுதுகிறவர் அல்லவா? கடிதமும் கற்பனை ரசத்தில் தோய்த்தே எழுதப்பட்டிருக்கும். பாதி படிப்பதற்குள் ஒவ்வொரு சமயம்



கண்களைப் பொத்தி உணர்வு பெறச் செய்தன

தலையை வலிக்க ஆரம்பித்து விடும். கவரில் கொட்டை கொட்டையான எழுத்தில் "சின்ன மன்னிக்கு நமஸ்காரம்" என்ற வரிகள் என் கண்ணில் பட்டு விட்டால், அவர் கடிதத்தை வைத்து விட்டு, அந்த இளம் ஹிருதயத்தின் நிர்மலமான வாக்கியங்களைப் படிக்க ஆரம்பித்து விடுவேன்.

"மன்னி! நீ சீக்கிரம் வந்து விடு. நீயும், நானும் விளையாடுவதற்காகப் பாபுவைத் தொந்தரவு செய்து 'கேரம்' வாங்கி வைத்திருக்கிறேன். என் சிநேகிதிகளிடமெல்லாம் உன்னைப் பற்றியே சொல்லியிருக்கிறேன்" என்கிற வரிகளைப் படிக்கும்போது கண்கள் மளமளவென்று நீரைப் பெருக்க ஆரம்பித்து விடும். "பாபுவை அப்படித்தான் கூப்பிடுவேன்" என்று அவள் உறுதியாய்ச் சொன்ன வார்த்தைகள் என் காதில் ஒலித்தன.

வருஷப் பிறப்பன்று அவருடன் அவள் வருவாள் என்று எதிர் பார்த்தேன். எதிர் பார்த்ததற்கு மாறாக என் தாயார் இறந்து போய்விட்டாள், அந்தப் பெரிய துயரில் மாப்பிள்ளை அழைப்பை மறக்கத்தான் வேண்டியிருந்தது. என் மனம் மட்டும் கல்யாணியைக் கற்பனை செய்து பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தது. அப்பொழுது ஒன்பது, பத்து வயதாய் இருந்தவள் கொஞ்சம் உயரமாய் வளர்ந்திருப்பாள் என்று எனக்குள் எண்ணி மகிழ்ந்தேன். கல்யாணமாகி மூன்று வருஷங்கள் கழித்து அவர் என்னை அழைத்துப் போக வந்தார். அவர் வருவதற்கு முன்பே பல கடிதங்களில் கல்யாணியை அழைத்து வரச் சொல்லி எழுதி யிருந்தேன். வாசலில் 'டாக்ஸி' வந்ததும் ஜன்னல் வழியாக எட்டிப் பாாத்தபோது அவர் மட்டும் இறங்குவதைக் கண்டேன். மனம் சஞ்சலப்பட்டது.

"கல்யாணியை ஏன் அழைத்து வரவில்லை? எழுதி யிருந்தேனே" என்று கேட்டேன்.

"என்னைவிடக் கல்யாணிதான் முக்கியமா உனக்கு?" என்றார் அந்த எழுத்தாளர்.

"இல்லை ......... அவளைப் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது."

ஊருக்குப் போனால் பார்க்கத்தான் போகிறாயே. அவள் நடுவில் வந்துவிட்டால் என்னைக் கூட கவனிக்க மாட்டாய் நீ" என்றார் சிரித்துக் கொண்டே.

உண்மைதான். அவர்வீட்டில் காலடி வைத்தவுடன் ஆரத்தித் தட்டுடன்



... உன்மேலே கோபம்கூட வருமா கண்ணே !

அவளே எதிரில் வந்தாள். பருவத்தின் மலர்ச்சியோடு ஒருவித வெட்கம் அவள் முகத்தில் பரவி யிருந்தது. அவள் இடுப்பைச் சுற்றி வளைத்துக் கொண்டிருந்த மேலாக்கு காற்றில் பின்புறம் பறக்க "மன்னி!" என்று புன்முறுவலுடன் என்னைப் பார்த்தாள்.

"கல்யாணி!" என்று அவர் கையை விட்டுவிட்டு அவள் கரத்தைப் பிடித்தேன்.

"மன்னி! உன்னைப் பார்க்காமல் எனக்கு எவ்வளவு கஷ்டமா யிருந்தது தெரியுமா?" என்று என் தோளில் சாய்ந்து கண்ணில் நீர்தளும்பச் சொன்னாள் கல்யாணி.

"எனக்கும் அப்படித்தான் இருக்கிறது கல்யாணி. அண்ணாவோடு நீ ஏன் வரவில்லை?"

"பாபுவா அழைத்துக் கொண்டு போகிறவன்? அடேயப்பா! மன்னிகளெல்லாம் நல்லவர்கள்தான். இந்த அண்ணாமார்கள்தான் சுவர்க்கத்தைக் கண்டமாதிரி மயங்கிப் போகிறார்கள்" என்று கையை விரித்துத் தலையை ஆட்டினாள்.

## 3

கீதைகளையெல்லாம் 'காப்பி' செய்து அனுப்பும் வேலை என் தலையில் விழுந்தது. என் பின்புறம் மறைந்து வரும் கல்யாணியை நிர்த்தாட்சண்யமாய் வெளி

யிலேயே நிறுத்திக் கதவைத் தாளிட்டுக் கொள்வார் அவர்.

"ஆமாம், என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாயே, கல்யாணியோடு விளையாடத்தானா?" என்று கேட்டார்.

"அவள் குழந்தைதானே?"

"நீயும் குழந்தைதான்! குழந்தையைப் போய்க் கல்யாணம் பண்ணிக் கொண்டேனே. என்னைத்தான் சொல்ல வேண்டும்."

"இதோ பாருங்கள். உங்களிடம் எனக்கு அன்பு இல்லையா? என்னிடம் அளவுக்கு மீறி அன்பைச் செலுத்தும் அந்தப் பெண்ணை உதாசீனம் செய்ய என்னால் முடியவில்லை. அவள் உங்கள் தங்கைதானே?"

"என் தங்கையைப் பற்றி எனக்குத் தெரியும். இந்த இரண்டு கதைகளையும் 'காபி' செய்து அனுப்ப வேண்டும். தெரிந்ததா? நடுவில் 'கேரம்' ஆடப் போனால் அது வெந்நீர் அடுப்புக்குப் போய்விடும்."

புருஷர்களின் ஆக்ஞை பிரமாதமானது அல்லவா? 'பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை'யாகக் கதைகளை எழுத ஆரம்பித்தேன். கல்யாணி நாளடைவில் என்னைப் பற்றித் தவறாக நினைக்க ஆரம்பித்தாள்.

"பாபுவின் அறையிலேயே ஐக்யமாகி விடுகிறாயே மன்னி. நீ முதலில் இருந்த மாதிரி இல்லை" என்பாள்.

கல்யாணி அன்று மலர்ந்த புஷ்பம் போல் விளங்கினாள். குதிப்பும், சிரிப்பும் போய் லஜ்ஜைப்பட ஆரம்பித்தாள். அவள் அண்ணா எதிரில் வரக்கூட அவளுக்குப் பிரமாதமான வெட்கம். "கல்யாணிக்கு வயதாகிவிட்டது பாபு. உன் ஆபீஸில் நல்ல வரனைப் பாரேன்" என்று அம்மா தொந்தரவு செய்ய ஆரம்பித்தாள். கடைசியில் கல்கத்தாவில் வேலையாயிருந்த பிள்ளை ஒருவன் என் பொல்லாத கல்யாணியை ஏற்றுக் கொண்டான். மாப்பிள்ளை தீபாவளிக்கு வந்தபோது கல்யாணியை வெளியிலேயே பார்க்கமுடியவில்லை.

"பார்த்தாயா அவளை? உன்னை என்னோடு தனியாய்ப் பேசவிட மாட்டேன் என்றவள் ஆத்துக்காரரைத் தனியாக விடமாட்டேன் என்கிறாள்" என்றார் இவர்.

தீபாவளி கழித்து மாப்பிள்ளை கல்யாணியைக் கூடவே அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று பிடிவாதம் பிடித்தார். ஊருக்குப் போகும் தினம் வந்தது. சிறுமியாய் என்னுடன் விளையாடிய கல்யாணி தலை குனிந்து என் அறைக்குள் நுழைந்தாள்.

"மன்னி! பாபு இல்லையோ இங்கே? பாபுவோடு பேசவிடாமல் உன்னை என்ன பாடு படுத்தி வைத்தேன்? இப்பொழுதுதான் தெரிகிறது மன்னி; பாபுவுக்கு ஆசை எவ்வளவு இருந்திருக்கும் என்று. அதற்காக உன் பேரில் கூடக் கோபித்துக் கொண்டிருந்தேன். அதையெல்லாம் மனதில் வைத்துக் கொள்ளாதே மன்னி" என்று கண்ணீர் வழியக் கூறினாள்.

"அசடே! அப்பொழுது நீ சிறிசு. உன் பேரில் கோபம் கூட வருமா கண்ணே" என்றேன்.

"கல்யாணி!" என்று மாப்பிள்ளை கூப்பிட்டார். வெட்கத்தால் கல்யாணியின் முகம் சிவந்தது.

"மன்னியோடு விளையாடுகிறாளா?" என்றவாறு மாப்பிள்ளை வாசற்படி அருகில் வந்து நின்றார்.

"மன்னியோடு பேசுவது இன்னும் சில மணி நேரம்தான். உங்கள் தங்கையைக் கொஞ்சம் அடக்கி வையுங்கள் இல்லாவிட்டால் உங்கள் பாடு திண்டாட்டம் தான்" என்றேன்.

"போடி மன்னி!" என்று கல்யாணி என் வாயை இறுகப் பொத்தினாள்.


பல போலிகள் இருப்பதால் நஞ்சன்கூடு பல்பொடி I.D.L.61, மெடிகேட்டட் கவனித்து வாங்குக


ஸ்ரீகர கஸ்தூரி ஸ்ரீகர கோரோஜனை பாலக்ஸ்

I.D.L.21 ச்யாவனப்ராச ச்வாசகோச டானிக்
I.D.L.35 ஆல்மன்டைன் பலவிருத்தி, வீர்யவிருத்தி
I.D.L.78 ஹுமார்டோன் ரக்தகோச டானிக்

யுனைடெட் கன்ஸர்ன், பந்தர் தெரு மதராஸ் (உதவி வைத்தியர் Dr. P. S. C. மணி)
(கோவை: 234, ராஜா வீதி) (திருச்சி: சைனா பஜார்) (மதுரை: 42, தெற்காவணி)




அந்தக் கேள்விக்குச் சரியான பதில் இதோ!



டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகளை தவறாமல் வாங்கலாம்



அதனால் போரிலீடுபடும் இந்திய யுவர்களுக்கு வேண்டிய உடை, ஆயுத உபகரணங்களை அளிக்க நீங்கள் உதவி புரிகிறீர்கள்



யுத்தத்தில் அவர்களுக்கு பக்கபலமளிக்கும் டாங்கிகள், ஆகாய விமானங்கள், துப்பாக்கிகள் வாங்கவும் உதவுகிறீர்கள்



மேலும், இந்தியக் கைத்தொழில்கள் விருத்தியடைவதற்கும் உதவி செய்கிறீர்கள்

யுத்தம் முடிந்தவுடன்...



வெற்றியுடன் திரும்பும் உங்கள் பிள்ளைகளை வரவேற்கும்போது அவர்கள் வெற்றி பெற நீங்களும் உதவி செய்தீர்கள் என்று சந்தோஷமடைவீர்கள். அன்றியும் அமைதி காலத்தில் அவர்களுக்கு உதவக்கூடிய உங்கள் முதலீடும் மேல் மேலும் பெருகுவதைக் கண்டு களிப்பீர்கள். எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் முதலிடுகிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு அதிக லாபம் —இப்பொழுதே செய்யுங்கள்!

## டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகளை வாங்குங்கள்

- ★ இந்திய கவர்ன்மெண்டாரால் உத்திரவாதமளிக்கப்பட்டது
- ★ எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றிக்கொள்ளலாம்
- ★ ஒவ்வொரு ரூ. 10-க்கும் ரூ. 3-8- லாபம்

T.2775

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

# ஆதி குமரகுருபர சுவாமிகள்

ஞாபகார்த்த

# சைவசித்தாந்த சாத்திரப் பரிசு.

# ரூ. 1,000/- (ஆயிரம்.)

•

விவரங்களுக்கு:

தஞ்சாவூர் ஜில்லா, திருப்பனந்தாள் காசி மடத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

•

குறிப்பு:—ஷை பரிசுக்குரிய எண்டௌமெண்டு அண்ணாமலை யுனிவர்ஸிட்டி ஸின்டிகேட், செனட் மீட்டிங்குகளில் முறையே 30-1-43, 27-3-43-ந் தேதிகளில் அங்கீகாரம் பெற்றிருக்கிறது.

# மணமகள் தேவை

"நாடோடி"

> "நாடோடி"யின் நகைச்சுவை ததும்பும் வாழ்க்கைச் சித்திரங்களை இனி "கல்கி"யில் நேயர்கள் அடிக்கடி காண்பார்கள். மேற்படி புனை பெயருடன் எழுதும் ஸ்ரீ எம். வெங்கட்ராமன் எம். ஏ. நமது பத்திரிகையின் உதவி ஆசிரியராகச் சேர்ந்திருக்கிறார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.
>
> —ஆசிரியர்.

"'கல்கி' பத்திரிகையில் கட்டுரைகள் எழுதத் தொடங்கியிருக்கும் 'நாடோடி' அவர்களுக்கு உடனேயே ஒரு மணமகள் தேவை. போட்டோவுடன் கடிதம் எழுதவும்."

உடனேயே இப்படி விளம்பரம் செய்யப் போகிறேன். ஆம், வீட்டில் நிலைமை அத்தனை நெருக்கடியாகி விட்டது!

நானும் போனால் போகிறது என்று பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். ஆனால் இனிமேல் என்னால் பொறுக்க முடியாது. என்னதான் தங்கையாக இருக்கட்டும், இன்டர்மீடியட் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருக்கட்டும், அப்பாவுக்குச் செல்லப் பெண்ணாக இருக்கட்டும், அதற்காக அவள் அடிக்கும் லூட்டியைப் பொறுத்துக் கொண்டேயிருக்க முடியுமா, என்ன?

என்ன கேட்கிறீர்கள்? ஆம், எல்லாம் என் தங்கை பாருவைப் பற்றித்தான் சொல்கிறேன்.

வீட்டில் தாயார் 'காஷுவல் லீவ்' எடுத்துக்கொள்ள வேண்டியதுதான், இந்த அம்மாளின் கொட்டம் ஆரம்பித்து விடும்.

"ஐயோ, ஈசுவரா! இந்த மூன்று நாளும் எப்படிக் கழியப் போகிறதோ" என்று எனக்கு ஏக்கமாயிருக்கும்.

வெண்கலக்கடையில் யானை புகுந்தது போல் சப்தமும், வீடு பற்றி எரிந்து கொண்டிருப்பது போல் புகையும் சமையலறையிலிருந்து கிளம்பினால் போதும், பாருவின் ராஜ்யம் ஆரம்பித்து விட்டது என்று தீர்மானித்துக் கொள்ளலாம்.

மூன்று நாட்களுக்கு வீட்டு வேலை தன் தலையில் விழுந்துவிட்டது என்று தெரிந்ததுமே பாருவுக்கு முகத்தில் எள்ளும், கொள்ளும் வெடிக்க ஆரம்பிக்கும். ஷேக்ஸ்பியர் பிடித்த கையினால் விளக்குமாற்றைப் பிடிக்க வேண்டியிருக்கிறதே என்று அவளுக்கு ஆத்திரம், ஆத்திரமாக வரும். 'டால்கம்' பவுடரைக் கையாண்ட விரல்களினால் அடுப்புக் கரியைத் தொட வேண்டியிருக்கிறதே யென்று அழுகை, அழுகையாக வரும். ஸோபாவில் சாய்ந்து கொண்டு, முன் தலை மயிரை வலது கை ஆள் காட்டி விரலினால் சுருட்டி விட்டுக் கொண்டே, புத்தகம் படித்தது போய், அடுப்புக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு "பூ! பூ!" என்று ஊத வேண்டியிருக்கிறதே என்று அவளுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு எழும்.

அவள் துக்கத்திற்கு இன்னொரு முக்கிய காரணமும் உண்டு. இந்தச் சர்க்கார் கடியாரத்தை ஒரு மணி முன்னால் தள்ளி வைத்தாலும் வைத்தார்கள், பாருவின்பாடு மிகவும் திண்டாட்டமாகி விட்டது, பாவம்! இதற்கு முன்னாலேயே காலைப்பொழுது, இவள் டிரஸ் பண்ணிக் கொள்வதற்கும், பவுடர் பூசிக் கொள்வதற்கும் போதாமல் இருக்கும். காலை 6 மணிக்கு 'டிரஸ்ஸிங் ரூம்'க்குள் நுழைந்தாளானால், 9-30 மணிக்குத்தான் பரக்கப் பரக்க வெளியில் வருவாள். அப்பொழுதும் அவள் 'டிரஸ்ஸிங்' பூராவாக முடிந்திருக்காது. ஆகவே இப்பொழுதோ கேட்கவே வேண்டியதில்லை. எந்தப் புடவை கட்டிக் கொள்வது, அதற்கு எந்த ஜாக்கட் சரியான 'மாட்ச்' என்று நிர்மானிக்கக் கூட சாவகாசம் இருக்காது. இந்த லட்சணத்தில் சமையல் வேலையும் சேர்ந்து விட்டதே என்று அவளுக்குக் கோபம் கோபமாக வருவதில் ஆச்சரியமில்லை. ஆகவே ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்று சொல்வார்களே, அதைப் போலத்தான் காலையில் பாரு காணப்படுவாள். சமையலறையில் ஒரு நாழி டிரஸ்ஸிங் ரூமில் ஒரு நாழி என்று மாறி மாறிக் காட்சி அளிப்பாள். இந்த லட்சணத்தில் ஆகும் சமையல் எப்படியிருக்கும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

பாருவின் சமையலை நான் சாப்பிடும்படி நேரிடும் போதெல்லாம்

எனக்கு ஒரே ஒரு ஆத்மாவைப் பற்றித் தான் ஞாபகம் ஏற்படும். இவளுக் கென்றே பிறந்து, இவளுக் கென்றே வளர்ந்து வரும் அவன், பாவம் என்ன பண்ணப் போகிறானோ என்பதுதான் என் கவலையாயிருக்கும். சீர் வரிசைக ளுடன், ஒரு சமையற்காரனையும் அனுப்பி வைத்தால்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று பிடி வாதம் பிடித்தால்தான் அவன் பிழைக் கலாம். ஆம், இப்போதே சொல்லி வைக்கிறேன். நானேக்கு "மச்சினன் நீ சொல்லக் கூடாதா?" என்று அவன் என்னுடன் சண்டைக்கு வர வேண் டாம்! இது நிற்க,

மணி 9-30 ஆனதும் சமையலறையில் பதார்த்தங்கள் வெந்ததோ, வேக வில்லையோ எல்லாவற்றையும் கொண்டு வந்து தாழ்வாரத்தில் கடை பரப்பி விடு வாள் பாரு. இந்தக் கடைக்கு நடுவில் நாங்கள் எல்லாரும் உட்காருவதற்குத் தட்டுகள் வைக்கப்பட்டிருக்கும். அவள் பரப்பி வைத்திருக்கும் பாத்திரங்களைத் தாண்டிக் கொண்டு, அவரவர்கள் தட்டின் முன் போய் உட்கார மிக சாமர்த்தியம் வேண்டும். பள்ளிக்கூட நாட்களில் 'ஹர்டில் ரேஸ்' ஓடிப் பழகியவர்களால் தான் இது சாத்திய மாகும்.

வெந்ததோ, வேகாததோ, சாப் பிட்டுத் தொலைப்போம் என்றாலாவது பாரு விடுவாள் என்கிறீர்களா? தானும் காலேஜுக்குப் போக வேண்டியவளாத லால் அவளும் எங்களு டன் கூட உட்கார்ந்து விடுவாள்! நானும் பார்க் கிறேன், அவள் வேணுமென்றே தான் வைக்கிறாளோ, அல்லது அவை தாமாகத்தான் அமைகின்றனவோ, சாதம், குழம்பு, மோர், ஊறுகாய், நெய், பருப்பு எல்லாம் என்னைச் சுற்றித்தான் வைக்கப் பட்டிருக்கும். ஆகவே உட்கார்ந்து கொண்டே, இடது கையினால் எல்லாருக்கும் பரிமாற வேண்டிய வேலை என்னுடையதாகி விடும்.

இந்தத் தொல்லை பொறுக்காமல், "இந்த அழகான சமையலைப் பண்ணு கிறது ஒத்தர்; பரிமாறுகிறது இன்னொருத்தர்" என்று நான் அலுத் துக் கொள்வேன். உடனே "நானேக்கு உன் பெண்டாட்டி ரொம்ப அழகாக சமைச்சுப் போடப்போறாள், நானும் பார்க்கப் போறேனே" என்று சொல் வாள் பாரு. இதைக் கேட்டதும் எனக்கு உண்டாகும் ஆத்திரத்தில் அவளுக்கு ஒரு அறை விடலாமா என்று தோன்றும். ஆனால் இந்த யோசனையை நான் இதுவரை அனுஷ்டானத்துக்குக் கொண்டு வராததற்குக்காரணம், அவள் குணத்தை நான் நன்கு அறிந்திருந்தது தான். காலேஜ் பெண்ணுதலால் முதலும், வட்டியுமாகத் திருப்பிக் கொடுத்து விடுவாள் என்பது எனக்கு நன்கு தெரியும்.

சரி, காலையில்தான் காலேஜுக்குப் போகிற அவசரத்தில், இப்படிச் செய் கிறாள், சாயந்திரமாவது நன்றாகச் சமைத்துப் போடுவாள் என் கிறீர்களா? அப்பொழுது தான் அவளுக்குத் திடீ ரென்று காலேஜ் விளையாட்டு களில் மோகம் விழுந்துவிடும். பக்கத்து வீட்டு சிநேகிதி யுடன் மோட்டாரில் வருவ தற்காகத் தினம் கடைசி பாடத்துக்கு 'டோக்கர்' கொடுத்து விட்டு, மாலை நான்கு மணிக்கே வீடு வந்து சேரும் பாரு அப்பொழுது தான் சாயந்திரம் ஏழு மணிக் கும், எட்டு மணிக்கும் வர ஆரம்பிப்பாள். அப்பாவுக்குச் செல்லப் பெண்ணுதலால் ஏன் இப்படி வேணுமென்றே நாழி கழித்து வருகிறாள் என்று யாரும் கேட்க முடியாது. ஆகவே ஐந்து மணிக்கே அப்பா என்னை அடுப்பு மூட்டி காப்பி போடச் சொல்வார். காப்பி போட்டதற்குப் பிற



"பண்ணுகிறது ஒத்தர்: பரிமாறுகிறது இன்னொருத்தர்"

கும் பாரு வரவில்லையானால் சாதம் சமைக்க வேண்டிய பொறுப்பும் என் தலையில் விழும்! பாரு வந்ததும், இதைப் பற்றி அவளிடம் குறைப்பட்டால் "செய்யேண்டா! நாளைக்கு ஆம்படையாள் வந்தால் அவளுக்கு நீ காப்பிப் போட்டுக் கொடுக்கத் தெரிய வேண்டாமா?" என்று நையாண்டி பண்ணுவாள்.

ஆக இம்மாதிரி இவள் அடிக்கும் கொட்டத்தைச் சேர்த்தாப் போல் மூன்று நாள் சகித்துக் கொண்டிருக்க வேண்டும் என்றால் முடிகிற காரியமா என்ன?

அப்படியாவது சிரித்த முகத்துடன் இவள் தன் ராஜ்ய பாரத்தை வகிக்கிறாள் என்றாவது போய்விட்டுப் போகிறது என்று இவள் ராஜ்யத்துக்கு உட்படலாம். அப்படிக்கின்றி எள்ளும், கொள்ளும் வெடிக்கும் முகத்துடன் இவள் எங்கள் எல்லாரையும் ஆட்டி ஆள விரும்பினால் அதற்கு எந்த ஆண் மகன்தான் உட்படுவான், கேட்கிறேன். நாளைக்குக் கல்யாணமாகி மனைவி வந்தால் அவளுக்குப் பயந்து நடப்பது இருக்கவே இருக்கிறது. அதற்கு முன்னால் வீட்டில் தங்கைக்கும் பயந்து நடக்க வேண்டும் என்றால், ஆயுள் முழுவதும் புருஷன் பெண் தெய்வத்துக்குப் பயந்து நடக்க வேண்டியவல்லவா ஆகிவிடுகிறது?

ஊஹூம். என்றால் இனிமேல் ஒருகணமும் பொறுக்க முடியாது. உடனே கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டுதான் மறு காரியம் பார்க்கப் போகிறேன்!

---

## பார்க்கவில்லை!



மனைவி:—ஏன் கண்ணை மூடிக் கொண்டு வெற்றிலை போட்டுக் கொள்கிறீர்கள்?

கணவன்:—டாக்டர் வெற்றிலையைக் கண்ணாலேயே பார்க்கக் கூடாது என்று சொல்லியிருக்கிறாரே!

அரை நிமிஷக் கதை



# ஏமாற்றம்

"ஸோமாஸ்"

அன்று அந்த பங்களாவின் வாசலில் என்றுமில்லாத கூட்டம் கூடியிருந்தது. பொதுப் பிரசங்கத்துக்கு ஏற்பாடு செய்வது போல் பெஞ்சிகள் வரிசையாய் மேடை மாதிரி போடப்பட்டிருந்தன. பீரோக்களும், நாற்காலிகளும் கிராமபோன் பெட்டிகளும், கட்டில்களும், மேஜைகளும், ஏராளமாக அந்தக் காம்பவுண்டுக்குள் இருந்தன.

ஏலம் போடும் இடத்தில் இத்தனை சாமான்கள் இருந்ததிலும், அங்கு இவ்வளவு ஜனங்கள் கூடியிருந்ததிலும் அதிசயம் என்ன இருக்கிறது?

தலையில் முண்டாசுடனிருந்த ஒரு ஆள் அந்த பெஞ்சின்மீது ஏறிக் கொண்டு "ஏழு ரூபாய்! ஏழு ரூபாய்!" என்று உரத்த குரலில் கத்திக் கொண்டிருந்தான். கூட்டத்தில் "ஒன்பது ரூபாய்!" என்றது ஒரு குரல். உடனே ஏலம் போடுபவன் "ஒன்பது ரூபாய்!" என்று கத்த ஆரம்பித்தான். இன்னொரு கீச்சுக் குரல் "பத்து ரூபாய்!" என்று உரக்கச் சப்தமிட்டது. ஏலம் போடுபவனும் "பத்து ரூபாய்" என்று கத்த ஆரம்பித்தான். இப்படியே ஏலம் போடுபவன் விலை கூறிக் கொண்டே போகும் பொழுது கூட்டத்திலிருந்து பலவிதமான குரல்கள் விலையை உயர்த்திக் கொண்டேயிருந்தன.

"கம்பெனியிலே வாங்கினால் இருபது ரூபாய்! இந்த விலைக்குக் கிடைக்காது! தாராளமாக விலையை ஏற்றிக் கேட்கலாம்!" என்று கத்தினான் ஏலம் போடுபவன்.

"பன்னிரண்டே முக்கால்!" என்று அழுத்தமான குரல் ஒன்று கேட்டது. உடனே ஏலம் போடுபவன் "பன்னிரண்டே முக்கால்! ஒருதரம்! இரண்டு தரம்!" என்று கத்தினான். வேறு எவரும் கேட்காமல் போகவே "சரி, பன்னிரண்டே முக்கால் ரூபாய்! மேஜையை எடுத்துக் கொள்ளுங்கள்!" என்றான். அந்தச் சமயத்தில்தான் கூட்டத்தில் திடீரென்று கலகலப்புச் சத்தம் கேட்டது. கடைசியாக விலை கேட்டவன் மௌனமாய்த் தன் நண்பனுடன் வெளியேற ஆரம்பித்ததுதான் அந்தக் கலகலப்புக்குக் காரணம்.

"என்ன ஐயா, விலை கேட்டு விட்டுப் பேசாமல் போறீங்களே!" என்றான் ஏலம் போடுபவன்.

கடைசி விலை கேட்டவன், "நான் ஒன்றும் ஏலம் எடுக்க வரவில்லையே! என் நண்பர் 'மணி என்ன?' என்று கேட்டார். 'பன்னிரண்டே முக்கால்' என்று சொன்னேன்" என்று சொல்லிக் கொண்டே நடையைக் கட்டினான்.

# படித்துப்பார்!

## குமரி மலர் — 1

[பதிப்பாசிரியர்: ஏ. கே. செட்டியார்; விலாசம்: 'கனக ஸ்ரீ நகர்' கதீட்ரல் போஸ்ட், சென்னை; விலை: ரூ. ஒன்று.]

நீலத்திரைக் கடல் ஓரத்திலே — நின்று தவம் செய்யும் குமரியம்மன் தமிழ் நாட்டின் அதி தேவதை. அந்தக் குமரியின் பெயரால் வெளி வந்திருக்கும் இந்தப் புதுமலர் அற்புதமான அழகும் மணமும் வாய்ந்து விளங்குகிறது. புத்தகத்தின் மேலட்டையிலிருந்தே பல நட்சத்திர ஆசிரியர்கள் நட்சத்திரக் கட்டுரைகள் வழங்கியிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்கிறோம். அவற்றுள் எல்லாம் முதன்மையாக நமது கவனத்தைக் கவர்வது ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கத்தின் கட்டுரையாகும். தமிழ் நாட்டில் முதன் முதலாகப் பிரமுகர்களின் குணசித்திரம் எழுத ஆரம்பித்த வ. ரா. வைப் பற்றி இன்று தமிழ் நாட்டில் புகழ் பெற்ற தமிழ்ப் பத்திரிகாசிரியராய் விளங்குகிற ஸ்ரீ சொக்கலிங்கம் என்ன எழுதினார் என்று தெரிந்து கொள்ள நாம் ஆர்வமடைவதில் வியப்பில்லை. இந்த ஆவலினால் 22 பக்கங்களையும் ஒரே மூச்சில் படித்து முடித்துவிட்டு, "இவ்வளவுதானா? இதற்குள் முடிந்து விட்டதா?" என்று வியப்புறுகிறோம். அவ்வளவு சரளமான தமிழ் நடையில் அவ்வளவு ரஸமாக இந்தக் கட்டுரை அமைந்திருக்கிறது. எழுதியவரையும் எழுதப் பட்டவரையும் பற்றி நம்மைப் பெருமை கொள்ளச் செய்கிறது.

இன்னும் இந்த அழகிய மலரானது ஸ்ரீ டி. கே. சி. முதலியவர்களுடைய கட்டுரைகளையும், ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை முதலியவர்களின் கவிதைகளையும், 'குகப்ரியை' முதலியவர்களின் கதைகளையும் தாங்கி விளங்குகிறது.

இம்மாதிரி மாதம் ஒரு மலர் மலரப் போகிறது என்பதை அறியும்போது தமிழன்பர்களுடைய உள்ளம் பூரிக்கும் என்பதில் சந்தேகமில்லை. இத்தகைய அரிய முயற்சியைத் தொடங்கியிருக்கும் உலகம் சுற்றிய தமிழர் ஸ்ரீ ஏ. கே. செட்டியாருக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

## யான் பெற்ற இன்பம்

[ஆசிரியர்: மு. அருணாசலம் எம். ஏ.; பிரசுரம்: சக்தி காரியாலயம், வடக்கு வெளி வீதி, மதுரை; விலை ரூ. 1-8-0.]

"வாலடித்து மேல் பதுங்கி
வாய்பிளக்க வான் கிழிக்க
வேல் பிடித்து வீரர் குத்தி
வீழ்புலிக்கு மேல் குதிப்பார்!"

எப்படி? புலி வேட்டை எப்படி? அதை வர்ணித்திருக்கும் கவிதை யழகுதான் எப்படி? இந்த மாதிரி ஒரு தமிழ்க் கவியைப் படித்து அதன் இன்பத்தைக் கண்டவர்கள் வாயை மூடிக் கொண்டு சும்மா இருக்க முடியுமா? இன்னும் ஆயிரம் பேர்களுக்காவது அதன் அழகையும் இன்பத்தையும் எடுத்துச் சொன்னாலொழிய அவர்களுடைய நெஞ்சு வெடித்து விடாதா?

ஸ்ரீ மு. அருணாசலம் அவ்வாறு தமிழ்க் கவிதை இன்பத்தினால் தம் நெஞ்சு வெடித்து விடாமலிருக்கும் பொருட்டே இந்த நூலில் அடங்கியிருக்கும் கட்டுரைகளை எழுதியிருக்கிறார். தமது நெஞ்சிலே பொங்கி எழுந்த இன்பத்தை மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொடுக்க முன் வந்திருக்கிறார்.

ஸ்ரீ மு. அருணாசலம் ஆங்கிலம், சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் சிறந்த பயிற்சி உள்ளவர். சர்வகலாசாலையில் எம். ஏ. பட்டம் பெற்றிருப்பதோடு, "இந்நூலாசிரியர் கற்பன கற்றுக் கேட்பன கேட்டுச் சிதம்பர நாதன் ஓவியப் பள்ளியில் பயின்றவர்" என்பதாக ஆசிரியர் திரு வி. கலியாண சுந்தரனாரிடமும் பட்டம் பெற்றிருக்கிறார். எனவே, தமிழ்க் கவிதைப் பண்பைக் குறித்த இவருடைய கட்டுரைகள் எல்லாம் டி. கே. சி. யின் கட்டுரை அமைப்பை அநுசரித்து அழகும் தெளிவும் ஆழ்ந்த உணர்ச்சியும் அடங்கி விளங்குகின்றன.

## 'டாக்கடோன்' அநுபந்தம்

[ஆசிரியர்: பி. டி. தம்பி; பிரசுரம்: 22, சாமி செட்டித் தெரு, மௌண்ட் ரோட், சென்னை; விலை: ரூ. 1—0—0.]

'டாக்கடோன்' எட்டாவது வருஷ அநுபந்தத்தை இந்த யுத்த காலத்தில் எவ்வளவு நன்றாய்க் கொண்டு வர முடியுமோ, அவ்வளவு நன்றாய்க் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்திய சினிமாக்கள் அபிவிருத்தி சம்பந்தமாகப் பல கட்டுரைகள் வெளியாகியிருக்கின்றன. "இதில் திவான்பஹதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள் எழுதியிருக்கிறாரோ, இல்லையோ?" என்று ஒரு சிலர் சந்தேகப் படலாம். அவர் கூட எழுதித்தானிருக்கிறார்.

---

## ஓடும்போதுதான்!



"என்ன ஸார், காரில் வேண்டுமானால் ஏறிக் கொள்ளுங்களேன்!"

"வேண்டாம், ஸார்! உங்கள் கார் ரொம்ப சப்தம் போடுகிறது!"

"எப்பொழுதுமா சப்தம் போடுகிறது?"

"இல்லை, இல்லை. ஓடுகிறபோது மட்டுந்தான்!"

# பூர்ணப் பொலிவு

அஜந்தா குகை ஓவியங்கள் பெண்மை அழகின் பூர்ணப் பொலிவைக் காட்டுகின்றன. வீட்டிலே பெண் இருந்து தேயிலை வழங்கும்போது குடும்பத்திலே அதுபோன்ற மனத்திருப்தி ஏற்படுகிறது. பானம் அருந்துகிறவர்கள் உல்லாசமாகவும் மகிழ்ச்சியுடனும் அருந்துவதற்கு அவள் அருகிருப்பதே காரணம். குடும்பத்தில் எல்லோரும் ஒருமித்திருந்து தேயிலை அருந்துங்கள். அதுவே இன்பம்.



**டீ தயாரிக்கும் முறை:**—சுத்தமான தண்ணீரைக் கொதிக்கவைத்து சாயமில்லாத பாத்திரமாக ஒன்று எடுத்து ஒவ்வொருவருக்கும் ஒரு டீஸ்பூன் விகிதமும் அதிகமாக ஒரு ஸ்பூன் அளவும், நல்ல இந்திய தேயிலையைப்போட்டு கொதிக்கும் ஜலத்தை விட்டு ஐந்து நிமிஷம் கழித்து வடிகட்டி பாலையும் சர்க்கரையையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.



## குடும்பத்திற்கு ஏற்ற

## ஒரே பானம் இந்தியன் டீ

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்ட்டாரால் வெளியிடப்பட்டது IK·2005 TM

# எதிர் ஜாமீன்

"பாணி"

அன்று மகாலிங்கம் தன் தந்தையிடம் வந்து, "அப்பா! உங்களிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்!" என்றான்.

"என்ன சொல்லேன்?" என்றார் அவன் தந்தை முத்துசாமி ஐயர்.

"இல்லை ... நீங்கள் ... நான் வந்து ..." என்று இழுத்தான்.

"ஏன் தயங்குகிறாய்? தைரியமாய்ச் சொல்லு" என்றார்.

"ஒன்னுமில்லை, கல்யாண விஷயமாக ......"

"உனக்குக் காலாகாலத்திலே கல்யாணத்தைப் பண்ணிப் பார்க்கணுமென்று ஆசையாயிருக்கு. ஆனால் நீ நாங்கள் சொல்கிறதைக் கேட்டால்தானே?"

"இல்லை, அப்பா! இப்பொழுது நான் ஒன்றும் ஆக்ஷேபணை சொல்லவில்லை."

"அப்படியானால் நாளைக்கே ஏற்பாடு பண்ணி விடுகிறேன். எந்தப் பெண்ணைப் பேசி முடிக்கலாம்? சந்தானத்தின் பெண் லலிதாவுக்கு எதிர் ஜாமீன் ஆயிரம் ரூபாய் கொடுக்கிறேனென்கிறார்கள். ராமகிருஷ்ணன் தன் பெண் வஸந்தாவுக்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய் கொடுக்கிறேன் என்கிறார். ஆனால் லலிதாவுக்கு நிறைய நகைகள் போடுவார்கள். மகாதேவன் பெண் சாரதாவுக்கு மஞ்சக்காணி ...."

"அப்பா! அந்தப் பெண்கள் எல்லாம் வேண்டியதில்லை."

"பின்னே?"

"நானே ஒரு பெண்ணைப் பார்த்திருக்கிறேன்."

"ரொம்ப பேஷ்! எனக்குக் கவலை விட்டது. அது யார், அந்தப் பெண்?"

"நம்மாத்துக்கு இரண்டு மூன்று நாளா வந்து கொண்டிருக்கிறாளே பகவதி, அவதான்."

"பார்வதிப் பாட்டியின் பேத்தியா?"

"ஆமாம்."

முத்துசாமி இதைக் கேட்டதும் உடனே பதிற் சொல்லாமல் சிறிது யோசனை செய்தார். பையனுக்கு அதிருப்தி உண்டாகாமல் நடந்து கொள்ள வேண்டுமென்று தீர்மானித்து "பகவதி அழகான பெண்தான். ஏழெட்டு க்ளாஸ் வரையில் படித்திருக்கிறாள்; கொஞ்சம் சங்கீத ஞானமும் உண்டு; ரொம்ப சமர்த்து; அடக்க ஒடுக்கமா நடந்து கொள்கிறாள். ஆனால் —"

"இன்னும் என்ன அப்பா வேண்டும்?"

"பாவம்! பெண் பரம ஏழை! ஒரு தம்பிடி எதிர்ஜாமீன் கிடைக்காது. எனக்கு அதைப் பற்றி அக்கரை இல்லை. ஆனால் உங்க அம்மா இருக்காளே, அவளுக்குத்தான் பிடிக்காது. உனக்குக் குறைந்தது இரண்டாயிரம் ரூபாய் எதிர் ஜாமீன் வாங்கிவிட வேண்டுமென்று கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறாள். நீ இந்த ஏழைப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறதாகச் சொன்னாயோ அவளுக்குப் பைத்தியம் பிடிச்சுப் போய்விடும். அப்புறம் உன்னிஷ்டம்" என்றார்.

"அப்படியானால் அம்மாவைக் கேட்கிறேன்" என்று சொல்லி விட்டு மகாலிங்கம் தன் தாயாரைப் பார்க்கச் சென்றான்.

பகவதி இந்த யுத்தத்தின் கொடுமைக்காளான எத்தனையோ பெண்களில் ஒருத்தி. அவள் தந்தை ஆதிசேஷன் இரங்கூனில் பிரபல மர வியாபாரியாய் இருந்தார். ஒரு விமானத் தாக்குதலின் போது அவர் இறந்து போனார். பால்யத்திலேயே தாயை இழந்துவிட்ட பகவதிக்கு இப்போது வேறு துணை கிடையாது. தகப்பனை இழந்த சில தினங்களுக்கெல்லாம் அவள் திடீரென்று நகைகளைக் கூட எடுத்துக் கொள்ளாமல் பர்மாவை விட்டு வெளியேறும்படியாயிற்று. சில சிநேகிதர்களுடன் அவள் எவ்வளவோ சிரமப்பட்டுத் தஞ்சாவூர் வந்து சேர்ந்தாள். இதெல்லாம் பழைய கதை.

அவள் இப்போது தன் பாட்டி பார்வதியுடன் வசித்து வந்தாள். பார்வதிக்கு ஆதிசேஷன் மாதா மாதம் செலவுக்கு அனுப்பி வந்தார். ஆனால் அவர் இறந்த பிறகு அந்தப் பணம் வருவது நின்று போகவே அவள் முத்துசாமி ஐயர் வீட்

டில் ஏதாவது காரியங்கள் செய்வான். அவர்கள் ஏதோ சிறிது பண உதவி செய்து வந்தார்கள்.

ஒரு சமயம் அந்தப் பாட்டி வியாதியாய்ப் படுத்துவிட்டாள். அப்பொழுது தான் அவள் தன் பேத்தியை மூத்துசாமி வீட்டிற்குத் தனக்குப் பதிலாகக் காரியஞ் செய்ய அனுப்பினள்.

ஒரு நாள் பகவதி கிணற்றிலிருந்து ஜலம் கொண்டு வரச் சென்றபோது மகாலிங்கம் அவளை அகஸ்மாத்தாகச் சந்திக்க நேர்ந்தது.

"பாட்டிக்கு உடம்பு எப்படி யிருக்கிறது?" என்று விசாரித்தான்.

"அப்படியே தானிருக்கிறது" என்று பதிலளித்தாள் பகவதி.

"ரொம்ப சிரமப்படுகிறாயே. நான் வேண்டுமானால் ஜலம் இழுத்துக் கொடுக்கட்டுமா?" என்று கேட்டான்.

பகவதி மௌனஞ் சாதித்தாள்.

"பாவம்! உனக்கு இது மாதிரி வேலை செய்து பழக்கமில்லை" என்று அவன் கூறியபோது அவள் கண்ணில் ஜலம் வந்து விட்டது. அவள் பதிற் சொல்லாமல் போய்விட்டாள்.

மகாலிங்கத்துக்கு அவளிடம் ஏககாலத்தில் அன்பும், பரிதாபமும் ஏற்பட்டது. ஆகவேதான், இது வரையில் தனக்குக் கல்யாணத்துக்கு அவசர மில்லையென்று சால்ஜாப்பு சொல்லிக்கொண்டு வந்த அவன் தன் தகப்பனாரிடம் பகவதியைப் பற்றிய பேச்செடுத்தான்.

மூத்துசாமி தன் பொறுப்பை ஒருவாறு தட்டிக் கழித்து விடவே, மகாலிங்கம் தன் தாயாரிடம் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பேசப் போனான். அவள் அப்பொழுது ஒரு பணப் பெட்டியில் பணத்தைத் திருப்பித்திருப்பி எண்ணி வைத்துக் கொண்டிருந்தாள். பிள்ளையைக் கண்டதும் "ஏன்! என்னமோ போலிருக்கிறாயே. உடம்பு ஒன்றும் மில்லையே?" என்று விசாரித்தாள்.

"உடம்பு எல்லாம் சரியாகத்தானிருக்கிறது. என் கல்யாண விஷயத்தைப் பற்றிப் பேச வந்தேன்" என்றான் மகாலிங்கம்.

"அப்படி வா வழிக்கு! அதான் நல்ல பிள்ளைக்கு அழகு. கல்யாணம் வேண்டாம் என்று நீ சொன்னபோது எங்க மனசு என்ன பாடு பட்டது தெரியுமா? உனக்கு நூறு பெண்கள் பார்த்து வைத்திருக்கிறேன். கமலத்தின் பெண் சரோஜா சுந்தரத்தின் பெண் பானுமதியைவிட அழகு. பானுமதியைவிட சிந்தாமணி கொஞ்சம் சிகப்பு. ஆனால் மூக்கு நீளம்" என்று வர்ணிக்கலானாள்.

"அம்மா! நான் அவர்களையெல்லாம் பற்றிப் பேச வரவில்லை. நம்மாத்துக்கு வர பகவதி இருக்கிறாளே......"

"என்ன இங்கே வேலை செய்கிற பகவதியையா?"

"வேலையா செய்கிறாள்! என்னமோ துரதிர்ஷ்ட வசமாக......" என்று கோபமாக ஆரம்பித்தான்.

மங்களம் குறுக்கிட்டு, "நான் அவளைப் பற்றி ஒன்றும் குறைவாகச் சொல்லவில்லை. செக்கச் செவேலென்று கிளி மாதிரி யிருக்கா! அவள் காரியஞ் செய்கிறதை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கணும். பொய், திரிசமன் ஒன்றும் கிடையாது. குடித்தனத்துக்கு ஏற்ற பெண்" என்றாள்.



நான் இழுத்துக் கொடுக்கட்டுமா?

"பின்னே என்ன அம்மா! அவ பாட்டி கிட்டச் சொல்லிக் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணி விடுங்களேன்?"

மங்களம் இதைக் கேட்டுச் சிரித்து விட்டு, "பயித்தியக்காரப் பிள்ளே! உங்க அப்பா சங்கதி தெரியாத பேசுகிருயே! பெண்ணைப்பற்றி ஒன்றும் சொல்றதற்கில்லே. வாஸ்தவந்தான். ஆனால் அவர் எதிர் ஜாமீன் வாங்காமல் கல்யாணம் பண்ணச் சம்மதிப்பாரா? பணம், பணம் என்று பிராணனை விடுகிறவராச்சே. ஒண்ணுமில்லே, ஒரு சீட்டிப் புடவை கெட்ட கேடு. அது வாங்கிக் கொடுக்கமாட்டேன்னு மூன்று மாசமா எத்தனை சால்ஜாப்பு சொல்லிருர், தெரியுமா? இரண்டாயிரம் ரூபாய் ரொக்கமாய் எதிர் ஜாமீன் கொடுக்கிற பெண்ணாக வரணுமாம். நான் எதற்கும் அவரிடம் சொல்லிப் பார்க்கிறேன்" என்றாள்.

தன் தாயார் சொல்லியதைக் கேட்டு மகாலிங்கம் ஆச்சர்யமடைந்தான். தன் பெற்றோர்கள் இப்படிப் பரஸ்பரம் ஒருவர்மீது ஒருவர் குற்றஞ் சாட்டுவதன் மர்மம் அவனுக்கு விளங்கவில்லை. எதற்கும் சிறிது பொறுத்திருந்து பார்க்கலாமென்று தீர்மானித்து ஒன்றுஞ் சொல்லாமல் போய்விட்டான்.

அன்று இரவு சதிபதிகளிருவரும் பேசிக் கொண்டிருந்தபோது, மங்களம் "கடைசியில் பிள்ளையழகைப் பார்த்தீர்களோன்னோ? பசுவதியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளணுமாமே!" என்றாள்.

"என் கிட்டேயும் சொன்னான். நான் எனக்குத் தெரியாது, உங்கம்மா எதிர் ஜாமீன் கேட்பாள் என்று சொல்லி விட்டேன்!" என்றார்.

"நல்ல வேலை செய்தேள்! அதான் அவன் என்னை வந்து கேட்டிருக்கிறான்."

"இந்தப் பெண்ணுக்கு எதிர் ஜாமீன் இல்லாததோடு இல்லையே. கல்யாணச் செலவு கூட நாம்தான் கையை விட்டுப் போடவேண்டும். அவன் மனதை மாற்ற என்ன பண்ணலாம்?"

"என் ஒன்றுவிட்ட அண்ணா பெண் நீலாவைத் தெரியுமா?"

"தெரியும்."

"காலேஜில் படிச்சிருக்காள். அவளுக்கு அவ அப்பா நிறைய சீதனம் வைக்கப் போகிறாராம். நம்ம மகாலிங்கத்துக்குக் கூட அவளை நன்னாத் தெரியும். அவள் இந்த ஊருக்கு யாரோ சிநேகிதர் வீட்டுக்கு வரப்போகிறாளாம். நம்ப ஆத்திலே வந்து நாலு நாளைக்கு இருக்கச் சொல்லலாமே."

"சொன்னால்?"

"அந்தப் பெண்ணைப் பிடித்தால் அவளையே கல்யாணம் பண்ணி வைத்து விடுகிறது."

"அது நல்ல யோசனை. அவளைப் பார்த்தால் அப்புறம் இவன் பசுவதி பேச்சே எடுக்க மாட்டான்" என்றார் முத்துசாமி.

சில தினங்களுக்கெல்லாம் சென்னையிலிருந்து நீலா வந்து சேர்ந்தாள். அவள் வந்ததிலிருந்து வீடு ஒரே அமர்க்களப்பட்டது. அவள் தான் ரொம்ப நாகரிகமுள்ளவள் என்பதைக் காண்பித்துக் கொள்வதற்காகக் கொஞ்சம் அதிகப்படியாகவே நடந்து வந்தாள். அவள் ஊரில் அதைப் பார்க்கவேண்டும் இதைப் பார்க்க வேண்டுமென்று சொல்லி மகாலிங்கத்துடன் நாள் பூராவும் ஊர் சுற்றிக் கொண்டிருந்தாள். மகாலிங்கத்துக்கும் இதெல்லாம் பிடிக்கவில்லை. ஆனால் அவன் தன் பெற்றோர்களின் சூழ்ச்சியை ஒருவாறு ஊகித்தறிந்தானதலால் அவர்களுக்கு வெறுப்பு ஏற்படும் விதத்தில் ஒரு தறுதலைபோல் நடந்து கொண்டான். இதெல்லாம் கொஞ்சம் கர்நாடகமான முத்துசாமிக்கும் அவர் மனைவிக்கும் பிடிக்கவில்லை. அவர்களுக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

"இவள் நாட்டுப் பெண்ணாய் வந்தால் குடித்தனம் அப்புறம் கோவிந்தாதான்" என்றார் முத்துசாமி.

"அவள் பண்ணுகிற செலவுக்கு இவன் சம்பாதிக்கிறது ஒரு நாளைக்கு வராது" என்றாள் மங்களம்.

"பணத்தை விட்டுத் தள்ளு. குடித்தனப் பாங்கே கிடையாது"

ஒரு கடுகு வெடிக்கத் தெரியவில்லை என்னத்தைச் சொல்றது?"

"அதெல்லாம் பள்ளிக்கூடத்திலே சொல்லிக் கொடுத்திருக்க மாட்டா" என்று முத்துசாமி கிண்டலாகச் சொன்னார்.

"கொஞ்சங் கூடக் கூச்சம் நாச்சம், மட்டு மரியாதை ஒண்ணுங் கிடையாது. கல்யாணம் பண்ணின நாலு நாளைக்கெல்லாம் மகாராஜி தனிக் குடித்தனம் வைத்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாள். அவள் பதினாயிரம் ரூபாய் சொத்து கொண்டு வந்தாலும் நமக்கு இந்தப் பெண் வேண்டியதில்லை."

"இருபதினுயிரம் கொண்டு வந்தாலும் வேண்டியதில்லை" என்று முத்துசாமி மார்தட்டிக் கொண்டு கூறினர்.

"சரி! அப்படியானல் இந்த பகவதியையா பண்ணிக் கொள்ளச் சொல்கிறது? பெண்ணை என்னமோ எனக்கு ரொம்பப் பிடித்திருக்கு. ஆனல் எதிர் ஜாமீன் வாங்காமல் எப்படிப் பண்ணுகிறது?"

"அதுதான் எனக்கும் மனசை உறுத்திக் கொண்டிருக்கிறது."

"நாளைக்கு நாலு பேர் என்ன சொல்லுவா? இந்தக் குடும்பத்திலே ஏதோ மர்மம் இருக்கு. இல்லாவிட்டால் இப்படி எதிர் ஜாமீன் வாங்காமல் கல்யாணம் பண்ணுவானா? எப்படியாவது பெண் கிடைத்தால் போதுமென்று பண்ணிவிட்டார்கள் என்று சொல்ல மாட்டார்களா?"

"கட்டாயம் சொல்வார்கள். அது மட்டுமா? நாளைக்கு நாம்ப தெருவிலே போகிறபோது நம்மைக் காண்பித்து 'அகமுடையான் பெண்டாட்டி இரண்டும் சுத்த அசடுகள். தங்கமான பிள்ளையைக் கையில் வைத்துக்கொண்டு எதிர் ஜாமீன் வாங்கவில்லை' என்று பரிகாசம் பண்ண மாட்டார்களா?"

"அதைக் கேட்டால் எனக்குப் பிராணனே போய்விடும்."

"இன்னொரு விஷயம். எங்க அம்மா சாகிற சமயத்திலே என்ன சொன்னு தெரியுமா? உனக்கு நான் ஆயிர ரூபாய் எதிர் ஜாமீன் கொடுத்தேன். நீ உன் பிள்ளைக்கு இன்னும் ஒரு ரூபாயாவது கூட வாங்கினல்தான் என் ஆத்மா திருப்தியடையும் என்று சொன்னுள். உங்களுக்கே அத்தனை ரூபாய் கொடுத்திருக்கிறபோது நம்ப ......"

"நான் என்ன அவ்வளவு மோசமா?"

"நான் பேச்சுக்குச் சொன்னேன். சண்டைக்கு வராதீர்கள்!" என்று மங்களம் சமாதானம் கூறினுள்.

சதிபதிகளிருவரும் பிறகு சிறிது நேரம் மௌனமாயிருந்தனர். அப்புறம் மங்களத்தம்மாள் "இதைப் பற்றிச் சாவகாசமாக யோசனை பண்ணுவோமே" என்ருள்.

"சரி" என்ருர் முத்துசாமி.

* * *

படுத்த படுக்கையாய்க் கிடந்த தன் பாட்டி பக்கத்தில் பகவதி உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது "பகவதி!" என்று கூப்பிட்டுக் கொண்டே மங்களம் வீட்டுக்குள் நுழைந்து, "பாட்டிக்கு



கர்ரன்ஸி நோட்டுகளை ஒளித்து வைத்தார்.

உடம்பு எப்படி இருக்கிறது?" என்று விசாரித்தாள்.

"அப்படியே தானிருக்கிறது; நேற்று இராத்திரியிலிருந்து ஒரே மயக்கமாய்ப் படுத்திருக்கிருர். மூடின கண்ணைத் திறக்கவில்லை. வாயைத் திறந்து ஒன்றும் பேசவில்லை" என்று சொல்லிப் பகவதி துக்கப்பட்டாள்.

"கவலைப்படாதே. நீ காலம்பர ஒன்றுமே சாப்பிடவில்லை போலிருக்கே. ஆத்தில் காப்பி வைத்திருக்கிறேன். போய்ச் சாப்பிட்டு விட்டு வா!"

"வேண்டாம் மாமி!"

"நான் பாட்டியைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீ போய் விட்டு வந்துவிடு" என்று சொல்லவே பகவதி அவள் வார்த்தையைத் தட்ட முடியாமல் சென்ருள்.

அவள் போனதும் மங்களம் பாட்டியுடன் என்னென்னமோ பேச்சுக் கொடுத்துப் பார்த்தாள். பாட்டி வாயையும் திறக்கவில்லை, கண்ணையும் திறக்கவில்லை. மூச்சு மட்டும் வந்து கொண்டிருந்தது. மங்களம் பாட்டியின் தலையணையைச் சரியாக வைத்தாள். பிறகு ஒரு தலையணையைப் பிரித்து அதில் பஞ்சு சரியாக இருக்கிறதா என்று பரீட்சை பார்த்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பகவதி வரவே மங்களம் அவளுக்குத் தைரியம் சொல்லி விட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பினுள்.

பாட்டி இறந்தால் தன் நிலைமை என்ன ஆகும் என்று எண்ணி பகவதி கண்ணீர் உதிர்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தபோது "பகவதி!" என்று கூப்பிடும் சப்தம் கேட்டது. மறு நிமிடம் முத்துசாமி உள்ளே நுழைந்தார். கிழவியின் நிலைமையைப் பற்றி விசாரித்தார். "நேற்றிலிருந்து தன் ஸ்மரணையே கிடையாது" என்ருள் பகவதி.

"நீ ஒன்றுக்கும் பயப்படாதே. நான் டாக்டரிடம் சொல்லி மருந்து வாங்கிக் கொண்டு வந்தேன். அதை ஆத்தில் வைத்துவிட்டு வந்து விட்டேன். கொஞ்சம் போய் எடுத்துக்கொண்டு வந்து விடுகிறாயா?" என்றார்.

"இதோ!" என்று பகவதி ஓடினாள்.

அவள் போனதும் "பாட்டி! பாட்டி!" என்று முத்துசாமி இரண்டு மூன்று தடவை கூப்பிட்டார். பாட்டி அசையவில்லை. உடனே அவர் அடிமேல் அடி வைத்து சாமான்கள் வைத்திருந்த ஓர் அறைக்குச் சென்றார். அங்கேயிருந்த பானைகளில் ஒன்றை எடுத்து அதில் தம் பையிலிருந்து ஒரு கர்ரன்ஸி நோட்டுக் கட்டை எடுத்து ஒளித்து வைத்து விட்டு மறுபடியும் நோயாளியின் பக்கம் வந்து உட்கார்ந்து கொண்டார்.

மருந்துடன் திரும்பிய பகவதி, முத்துசாமி ஐயர் படபடப்புடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். "பகவதி! பாட்டி நடுவில் ஒரு தரம் கண் விழித்தாள்!" என்று முத்துசாமி கூறினார்.

"அடடா! நான் பக்கத்தில் இல்லையே" என்று பகவதி வருத்தப்பட்டாள்.

"என்னிடம் பாட்டி ரகசியமாக ஒரு விஷயம் சொன்னாள்."

"என்ன?" என்று பகவதி ஆவலுடன் கேட்டாள்.

"உங்க பாட்டி ஒரு பானையில் பணம் வைத்திருக்கிறாளாம். அதைத் தேடி எடுத்துக் கொள்ளச் சொன்னாள்."

"நிஜமாகவா!" என்று கேட்டு ஆச்சர்யப்பட்டாள் பகவதி.

"நான் போய் சாயங்காலம் வருகிறேன். பணத்தைத் தேடி எடுத்துப் பத்திரமாய் வைத்துக் கொள்" என்று கூறி அவர் கிளம்பி விட்டார். அவருக்கு அங்கே இருந்தால் தாம் ஏதாவது உளறி விடுவோமோ என்று பயம். அவர் முகத்தில் பரம திருப்தி குடி கொண்டிருந்தது.

மறுநாள் ஊரெல்லாம் பகவதிக்குப் பணம் கிடைத்ததைப் பற்றி ஒரே பேச்சாய் இருந்தது. "கிழவி மகா கருமி! ஆயிரம் ரூபாய் பானையில் வைத்திருக்கிறாளாமே! அத்தனை பணத்தை வைத்துக்கொண்டா காரியம் செய்யப் போறான்!" என்றார் ஒருவர்.

"ஆயிரம் மட்டுமா! தலைகாணிக்குள்ளே ஒரு ஆயிரத்தோரு ரூபாய் இருந்ததாம்" என்றார் இன்னொருவர்.

"சரகுக் கட்டுக்குள்ளே பதினாயிரம் ரூபாய் இருந்ததாமே!" என்றார் ஒரு புரளிக்காரப் பேர் வழி.

மகாலிங்கத்தின் காதிலும் இந்த விஷயங்கள் விழுந்தன. அவன் அன்று வீட்டுக்குப் போனபோது அவன் தாயார் "மகாலிங்கம்! இத்தனை நாளாச்சு உங்கப்பாவைச் சரிப்படுத்துகிறதற்கு. பகவதியைப் பிடிச்சிருந்தா அவளையே கல்யாணம் பண்ணிக் கொள்ளட்டும் என்று சொல்லி விட்டார். உங்க இரண்டு பேருக்கும் ஜாதகம் நன்றாயிருக்காம்! கிழவி கண்ணை மூடுகிறதற்குள்ளேயே கல்யாணத்தை நடத்திவிட வேண்டுமென்று துடியாய்த் துடிக்கிறார்" என்றாள்.

சில தினங்களில் பகவதிக்கும் மகாலிங்கத்துக்கும் விவாகம் நடந்தேறியது என்று சொல்ல வேண்டியதில்லை. ஆனால் மகாலிங்கத்தின் பெற்றோர்களுக்கு மட்டும் ஒரு தீராத குறை இருந்து வந்தது.

"ஆமாம்! பானையில் ஆயிரம் இருந்த விஷயம் எனக்குத் தெரியும். தலைகாணியில் பணம் எப்படி வந்தது?" என்று முத்துசாமி அடிக்கடி தன்னைத் தானே கேட்டுக் கொண்டிருக்கிறார். மங்களமோ "ஆமாம் தலைகாணிக்குள் ஆயிரத்தோரு ரூபாய் இருந்த மர்மம் எனக்குத் தெரியும். பானைக்குள் எப்படிப் பணம் வந்தது?" என்று தன்னையே விசாரித்துக் கொண்டிருக்கிறாள்!

---

## கவிச் சித்திர விளக்கம்

புலி வேட்டை யாடுவதற்காக வனம் புகுந்த தலைவன் எப்படியோ தன் தோழர்களை விட்டுப் பிரிந்து வழி தடுமாறித் தனியே போய் விடுகிறான். வழியிலே சரக்கொன்றை மரமொன்று அழகாகப் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கிறது. அதைப் பார்த்ததும், மணப் பெண் ஒருத்தி மணவாளனுக்கு மாலை யிடுவதற்காகக் கையில் மாலையை யேந்தி நிற்கும் காட்சி தலைவனுக்கு ஞாபகம் வருகிறது. சீக்கிரத்திலேயே ஒரு பெண்ணும் அங்கே வந்து சேருகிறாள்! ... பிறகு நிகழ்ந்தவற்றை ஸ்ரீ மு. அருணாசலம் எம். ஏ., இயற்றிய "யான் பெற்ற இன்பம்" என்னும் நூலில் கண்டு மகிழலாம்.



மையல்கொண்டு மன்னனுக்கு
மாலையிட வந்துநின்ற
தையலார் போலச்
சரக்கொன்றை பூத்திருக்கும்!

கவிச் சித்திரம்—14. —கூவப்ப நாயக்கன் காதல்.



# பாப்பா மலர்



## கண்ணாம்பூச்சி

[ ராஜி ]

சேதுவும் பேபியும் நெருப்புக் கோழி ஒன்றை வீட்டில் வளர்த்து வந்தார்கள். அவர்கள் எங்கே போனாலும் நெருப்புக் கோழியையும் கூடவே அழைத்துக்கொண்டு போவார்கள். அவர்கள் விட்டு விட்டுப் போனாலும் நெருப்புக் கோழி அவர்களைத் தேடிக் கொண்டு ஓடி வந்து விடும். அதன்மீது ஏறிக் கொண்டு சேதுவும் பேபியும் சவாரி செய்வது உண்டு. நெருப்புக் கோழியும் சேதுவையும் பேபியையும் சந்தோஷப் படுத்துவதற்காக நெருப்புத் துண்டுகளையும் துணிகளையும் விழுங்கிக் காண்பிக்கும்.

ஒரு நாள் தோட்டத்தில் சேதுவும் பேபியும் நெருப்புக் கோழியுடன் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது "சேது! பேபி!" என்று அவர்களை யாரோ கூப்பிடுவது போலிருந்தது. தங்கள் தாயார் தான் கூப்பிடுகிறாள் என்றறிந்து சேதுவும் பேபியும் ஓடோடியும் சென்றார்கள்.



தாயார் குழந்தைகளைக் கூப்பிட்டு ஒரு தட்டு நிரம்ப பக்ஷணங்களைக் கொடுத்து இரண்டு பேரையும் எடுத்துக் கொள்ளும்படி சொன்னாள். தட்டைப் பார்த்ததும் அவர்களுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தட்டில் ஜிலேபி, மைசூர் பாகு, ஹல்வா எல்லாம் இருக்கவே குழந்தைகளின் நாக்கில் ஜலம் சொட்ட ஆரம்பித்தது.

திடீரென்று அவர்களுக்கு நெருப்புக் கோழியைப் பற்றி நினைவு வந்தது. "பக்ஷணங்களை நெருப்புக் கோழிக்கும் கொடுக்க வேண்டுமா?" என்ற யோசனை பலமாக இருந்தது.

சேதுவுக்கும் பேபிக்கும் அப்பொழுது ஒரு யோசனை தோன்றிற்று. ஏதோ சில வார்த்தைகள் ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். அவர்களுக்கருகில் தோட்டத்தில் நெருப்புக் கோழி நின்று கொண்டிருந்தது. அந்த இடத்திற்கு எதிரில் மரத்தினால் தடுக்கப் பட்ட சுவர் ஒன்று இருந்தது. அந்த மரச் சுவருக்குப் பக்கத்தில் நெருப்புக் கோழிக்குத் தெரியாமல் பக்ஷணத் தட்டை வைத்து விட்டு இருவரும் நெருப்புக் கோழியிடம் சென்றார்கள். நெருப்புக் கோழியை ஏமாற்றிவிட்டு அதற்குத் தெரியாமல் பக்ஷணங்களைத் தின்ன வேண்டும் என்று பேபியும் சேதுவும் தீர்மானித்தார்கள்.

உடனே நெருப்புக் கோழியிடம் சென்று "நாம் கொஞ்ச நேரம்



கண்ணாம்பூச்சி விளையாட்டு விளையாடலாமா?" என்று கேட்டார்கள். நெருப்புக் கோழியும் சந்தோஷமாகச் சம்மதித்தது. "நாங்கள் இருவரும் கண்ணை மூடிக் கொள்கிறோம். நீ எங்கேயாவது ஒளிந்து கொள். 'வரலாமா' என்று நாங்கள் கேட்கின்றோம். நீ 'வரலாம்' என்றவுடன் நாங்கள் இருவரும் உன்னை ஓடிப் பிடிக்கின்றோம்" என்று அவர்கள் சொல்ல நெருப்புக் கோழி ஒளிந்து கொள்ளச் சென்றது.

சேதுவும் பேபியும் சற்று நேரம் கழித்து "வரலாமா, வரலாமா?" என்று கேட்டார்கள். ஆனால் நெருப்புக் கோழியிடமிருந்து பதில் இல்லை. ஐந்து நிமிஷம் பார்த்தார்கள்; பத்து நிமிஷம் பார்த்தார்கள். அப்பொழுதும் பதில் இல்லை. அவர்களுக்குச் சந்தேகமாய்ப் போய்விட்டது. நெருப்புக் கோழி என்ன செய்கிறது என்று எட்டிப் பார்த்தார்கள். அப்பொழுது நெருப்புக் கோழி ஒளிந்து கொள்ளுவதற்காகத் தன் தலையை மரப் பலகையில் இருந்த ஒரு துவாரத்தில் நுழைத்துக் கொண்டு நிற்பதைப் பார்த்தவுடன் சேதுவும் பேபியும் சிரித்தார்கள். "தலையை மறைத்துக் கொண்டால் உடல் முழுவதும் மறைந்ததுபோல் எண்ணிக் கொண்டிருக்கிறதே! இந்த நெருப்புக் கோழிக்குத்தான் என்ன முட்டாள்தனம்! சரி, இதுதான் சரியான சமயம்! நாம் ஒளித்து வைத்திருக்கும் பக்ஷணங்களை நெருப்புக் கோழிக்குத் தெரியாமல் தின்றுவிடலாம்!" என்று பக்ஷணம் ஒளித்து வைத்திருக்கும் இடத்திற்கு ஓடி வந்தன.

பக்ஷணத் தட்டினருகில் வந்தவுடன் இரண்டு குழந்தைகளுக்கும் தூக்கி வாரிப்போட்டது. பக்ஷணத் தட்டினருகில் நெருப்புக் கோழியின் தலை நீட்டிக் கொண்டிருந்தது. துரதிர்ஷ்டவசமாக



நெருப்புக் கோழி ஒளிந்து கொள்ளத் தலையை மறைத்துக்கொண்ட இடத்தினருகில்தான் பக்ஷணத் தட்டும் இருந்தது. "அடடா, நாம் பக்ஷணத் தட்டை வைக்கும்பொழுது மரப் பலகையில் உள்ள துவாரத்தைக் கவனிக்காமல் போய் விட்டோமே" என்று சேதுவும் பேபியும் வருத்தப்பட்டார்கள். வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்?



"ஏ, நெருப்புக் கோழி! எங்களை ஏமாற்றி விட்டுத் தானே எல்லாவற்றையும் தின்றாய்?" என்று குழந்தைகள் கேட்டன.

"ஆமாம்; என்னை ஏமாற்றப் பார்த்தால் அப்படித்தான் செய்வேன்" என்றது நெருப்புக் கோழி.




### இருக்காது

**மனைவி :**—நம்ம குழந்தைக்கு எவ்வளவு பிடிவாத மிருக்கிறது! அந்த குணம் என்னிடமிருந்து வந்ததல்ல.

**கணவன் :**—ஆம், உண்மைதான். உன் பிடிவாதந்தான் குறையாமல் உன்னிடமே யிருக்கிறதே.

—ஜி. கே. மூர்த்தி.

* * *

### எது கஷ்டம்?

**மானேஜர் :**—வேலையில் உமக்கு அநுபவமில்லை யென்கிறீர்! ஆனால் அதிகச் சம்பளம் கேட்கிறீரே!

**வேலைக்கு வந்தவர் :**—அனுபவமின்றி வேலை செய்வது தானே ஸார் மிகக் கஷ்டம்?

—பழனியப்பன்.

* * *

### வாஸ்தவம்தான்!

**கணவன் :**—உன்னைக் கல்யாணம் செய்து கொண்டபோது உனக்கு ஒரு கந்தைத் துணி கூடக் கிடையாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

**மனைவி :**—வாஸ்தவம். இப்பொழுது நிறைய இருக்கின்றன!

—சம்பந்தமூர்த்தி.

* * *

### கண் கண்ட பலன்!

**கணேச ஐயர் :**—என்ன, ராமநாதய்யர்வாள்! ஒரு தினுஸாகப் பார்க்கிறீரே? கண்களில் ஏதாவது கோளாறோ?

**ராமநாத ஐயர் :**—அதை ஏன் கேட்கிறீர் போங்கள்! இந்தப் பகுத்தறிவுப் போட்டிகளை மேலிருந்து கீழும் இடமிருந்து வலமுமாகப் பார்த்துப் பார்த்து எழுதி, கடைசியில் எதைக் கண்டாலும் காக்காய் பார்ப்பது போலப் பார்க்கவேண்டி யாகிவிட்டது!

—ஆர். எஸ். வாசன்.

### அனுமதி

**பையன் :**—அம்மா! அலமாரியிலே இருக்கிற பிஸ்கோத்தை எடுத்துக் கட்டுமா?

**தாயார் :**—உம், எடுத்துக்கோ.

**பையன் :**—நல்ல வேளை, எடுத்துக்கோ என்றாயே! இல்லாவிட்டால் எனக்கு ரொம்ப ரொம்ப சிரமமாகப் போயிருக்கும்!

**தாயார் :**—என்னடா சிரமம்?

**பையன் :**—நான் அதை முன்னாலேயே எடுத்துச் சாப்பிட்டுவிட்டேன்!

—பி. ரத்தினம்.

* * *

### ஆயிரம் பொய்

**பிள்ளை வீட்டுக்காரர் :**—என்ன ஐயா கலியாணச் செலவிற்கு ஆயிரம் தருவதாக பொய் சொன்னீரே.



**பெண் வீட்டுக்காரர் :**—ஆயிரம் பொய் சொல்லி ஒரு தாலி கட்டு என்பது உமக்குத் தெரியாதா என்ன?

—எம். ஆர். சுவாமி.

தொடர் கதை

# உடைந்த வளையல்

து. ரா.

## ஆறும் அத்தியாயம்

தகப்பனர் வந்து விட்டாரென்று கேள்விப் பட்டதும் சுசீலா அவசர அவசரமாக வீட்டிற்குக் கிளம்பினள். தகப்பனரைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஒரு பக்கம். தகப்பனருடன் வரும் பெண்ணைப் பார்க்க வேண்டும் என்ற அவசரம் ஒரு பக்கம். அந்தப் பெண் சாதாரணச் சமையற்காரியாய்த் தன் வீட்டுக்கு வருகிறவளாளுல் அவளைப் பார்க்க வேண்டுமென்று அவளுக்கு அவ்வளவு ஆசை இராது. ஆனல் அவளோ வெறும் சமையற்காரி அல்ல. கெளரவமாகக் கணவனுடன் தன்னைப் போல் குடித்தனம் பண்ணிக் கொண்டிருந்தவள். விதியின் கொடுமையினல் கணவனை இழந்து அனதரவாய்த் தன்னை அண்டி வருகிறவள். தன் தகப்பனர் எழுதிய கடிதத்திலிருந்து அவள் தன்னை விட மிகவும் இளையவளாய்த்தான் இருக்க வேண்டும் என்று சுசீலா தீர்மானித்துக் கொண்டாள்.

நாராயணய்யர் வீட்டு வாசற்படியை விட்டு இறங்கினவுடனேயே சுசீலா சாமாவைப் பார்த்து "அப்பாவும் ஒரு பெண்ணும் வந்திருக்கிருர்களா?" என்று கேட்டாள்.

"ஆமாம் வந்திருக்கிருள். அவள் தானே சமையல்காரி?" என்று சாமா சந்தேகத்தோடு கேட்டாள்.

"ஆமாம். அவள் எப்படி இருக்கிருள்?"

சாமாவின் மனதில், புதிதாக வரும் சமையல்காரியின் மேல் கோபந்தான் ஏற்பட்டிருந்தது அவளால் தன் வேலை போய் விட்டதே என்று. அந்தக் கோபத்தில், ராம சர்மாவுடன் பேசும் போது பின்னுலிருந்த பெண்ணை அவள் நன்ருகக் கவனித்துப் பார்க்கவில்லை. ஆகையால் அவள், "நான் அவளைச் சரியாய்ப் பார்க்கவில்லை அம்மா. அவள் பாட்டுக்குப் பின்னுலே நாணிக் கொண்டு நின்னுண்டிருந்தா" என்ருள்.

சுசீலா வீட்டிற்குள் சென்றதும் சர்மா தம் புத்திரியை அதிக வாஞ்சையுடன் வரவேற்ருர்.

"ஏன் அப்பா! இன்றைக்கு வரப் போறேன்னு கடுதாசு போடுவாய் என்று பார்த்தேன். ஏன் போடவில்லை?" என்று சுசீலா கேட்டாள்.

"நான் இன்றைக்கு வருகிறதாக இல்லையம்மா. திங்கட்கிழமை புறப்படலாமென்றுதான் இருந்தேன். அதற்குள் கோர்ட் விஷயமாய் இங்கே அவசரமாய் வரவேண்டியதாய்ப் போய் விட்டது."

"கோர்ட் விஷயமா? அதென்ன?"

"அந்தப் பெண்ணுக்காகத்தான். அவளுக்கு இரண்டு மைத்துனன்மார்கள் இருக்கிருர்கள். அவள் அகமுடையான்தான் எல்லோருக்கும் மூத்தவர். ஆஸ்தி ஏதோ கொஞ்சம் ரொக்கமாய் இருக்கிறதாம். பாகம் ஆகவில்லையாம். இவளை அவர்கள் வைத்துக் கொண்டு சம்ரக்ஷிக்க ஒப்புக்கொள்ள மாட்டேன் என்கிருர்கள். 'நீ உங்காத்துலே வைத்துக் கொள்' என்கிருன் ஒருவன். 'நீதான் வைத்துக் கொள்ளேன்' என்கிருனும் இன்னெருத்தன். இப்படி இரண்டு பேரும் கைவிட்டுவிட்டார்கள். அவர்களிடமிருந்து ஏதாவது பரிகாரம் கிடைக்குமா? என்று வக்கீல் வரதாச்சாரியாரைக் கேட்கவேண்டும்" என்று கூறிவிட்டு "தங்கமணி எங்கே?" என்று கேட்டார்.

"இன்றைக்கு வருஷப் பிறப்போன்னே? காலையிலே காப்பி சாப்பிட்டுவிட்டு அவர் அண்ணு ஆத்துக்குப் போனேம். அவர் அங்கிருந்து எங்கேயோ வெளியே போனர். நான் ஐந்து மணிக்கு 'ஆத்துக்குப் போகிறேன்' என்று கிளம்பினேன். ராத்திரி சாப்பிட்டுவிட்டுப் போகலாம் என்று மன்னி நிறுத்திவிட்டாள். 'சரி' என்று

இருக்கேன். அதற்குள் சாமா ஓடி வந்து சொன்னான் நீ வந்திருக்கேன்னு. ஆமாம், அவள் எங்கே அப்பா, மதுரம்?''

கமலாவின் கேள்வி காதில் விழுந்தவள் போல் அந்தப் பெண் சமையல் உள்ளிலிருந்து ஹாலுக்கு வந்தாள். கமலா அவளை ஏற இறங்க நோக்கினாள்.

மதுரத்திற்குப் பதினேழு வயதுக்கு மேல் இராது. நிதானமான உயரம்; ஒற்றை நாடியான தேகம். 'செக்கச் செவேலென்று ரோஜாப் புஷ்பத்தைப் போல் சிவந்த நிறமுடையவளாய் இருந்தாள். தலையில் படிப்படியாய்ச் சரிந்த கூந்தல். முகம், மூக்கும் விழியுமாய் கள்ளங் கபடற்ற ஒரு குழந்தையின் முகம் போல் காணப்பட்டது. ஆனால் கவலையினால் கண்கள் ஒளியிழந்து விளங்கின.

கமலா வைத்த கண் வாங்காமல் தன்னைப் பார்ப்பதைக் கண்டு அவள் வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டாள்.

''என்ன அழகு இந்தப் பெண்!'' என்று கமலாவின் மனம் முதலில் நினைத்தது. பிறகு, ''ஹூம், அப்படி ரொம்ப' அழகா என்ன?'' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டாள். மதுரத்தின் மூளியாய் இருந்த கழுத்தையும் முகத்தையும் பார்க்க அவளுக்குப் பரிதாபமாக இருந்தது. காதில் ஒரு சின்னத் தோட்டையும், கையில் ஒரு தங்கக் காப்பையும் தவிர அவள் தேகத்தில் வேறு ஆபரணம் ஒன்றும் காணப்படவில்லை. ''நகையெல்லாம் போட்டுக் கொண்டால் இன்னும் எவ்வளவு அழகாய் இருப்பாள்!'' என்று நினைத்தபோது கமலாவுக்குச் சிறிது பொறாமைகூட உண்டாயிற்று.

''வெட்கப்படாதே அம்மா. இவள் தான் கமலா. இதைப் பிறத்தியார் வீடு என்று நினைத்துச் சங்கோசப்படாதே. உங்கள் ஆத்திலேயே இருக்கிறது போல் நினைத்துக் கொள். கமலா உனக்கு அக்கா மாதிரி'' என்றார் சர்மா அவளைப் பார்த்து.

கமலா சிரித்துக்கொண்டே அவளைக் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றாள்.

''உன் பெயரைக் கேட்டவுடனேயே நாம் இரண்டு பேரும் ரொம்ப சிநேகமாய் இருப்போம் என்று என் மனதில்



என்னமோ பட்டது. நீ என்னைக் கமலா என்று கூப்பிடு. அக்கா என்று கூப்பிட்டாலும் சரிதான். அம்மா என்று மட்டும் கூப்பிடக் கூடாது. தெரியுமா? என்னை 'அம்மா' என்று கூப்பிடுகிறவர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்கிறதில்லை. நாம் என்ன கிழவியாய்ப் போய் விட்டோமா என்று நினைத்துக் கொள்வேன்'' என்றாள் கமலா.

இரவு எட்டு மணிக்குத் தங்கமணி வந்தான். மாமனாரும் மாப்பிள்ளையும் ஊர் விஷயங்களைப் பற்றிச் சாப்பிடுகிற வரையில் பேசிக் கொண்டிருந்தார்கள். தோட்டத்தைப் பார்த்துக்கொள்ள ஒரு நல்ல ஆளாய் வைக்க வேண்டுமென்று தங்கமணி சொன்னபோது, ''ஆள் என்னத்திற்கு ஆள்! நான் இருக்கிறேன் பார்த்துக் கொள்ள'' என்றார் சர்மா.

கமலா சிரித்தாள். ''நன்றாய் இருக்கிறது! எந்த வேலையானாலும் இப்படி இழுத்துப் போட்டுக் கொள்கிறது தான் அப்பாவுக்கு வேலை. தோட்ட வேலை செய்கிறாராம்! வயசு கொஞ்சமாய்த் தானே ஆகிறது? ஏன் அப்பா



அறுபது வயசு ஆகவில்லையா உனக்கு ?'' என்றாள்.

"ஆனால் என்ன? ஒருகால் முழுக்க ஏற்றம் இறைத்துக் கொண்டிருப்பேனே" என்றார் சர்மா.

இவ்வாறு பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு எல்லாம் படுக்கச் சென்றார்கள். அப்பொழுது சுசீலா தங்கமணியைப் பார்த்து, வெகு நேரமாய்த் தன் மனதில் துடித்துக் கொண்டிருந்த கேள்வியைக் கேட்டாள்.

"மதுரத்தைப் பார்த்தீர்களா? எப்படி இருக்கிறாள்?"

"பாவம், பரிதாபமா யிருக்கிறது ரொம்பச் சின்னப் பெண். நான் வயதானவளாக்கும் என்றல்லவா நினைத்தேன்."

"ஆமாம், சின்னவள்தான். என்னை விட ஏழு வயசு குறைவாம்."

"ஐயோ பாவம்!—மதுரம்! பெயரைப் போல்தான் இருக்கிறாள்; இல்லையா? அவளை உன் தங்கை என்று சொல்லிக்கொள்ள நீ சிறிதும் வெட்கப் பட வேண்டியதில்லை." என்றான் அவள் கணவன்.

## ஏழாம் அத்தியாயம்

மதுரம் வந்ததிலிருந்து 'சாந்தி விஹா'ரில் ஒரு கலகலப்பு ஏற்பட்டது. உழைப்பும் சுறுசுறுப்புமே உருவெடுத்து வந்தவளாய் இருந்தாள் அவள். தினம் விடியற் காலையில் ஐந்து மணிக்கே எழுந்து விடுவாள், எழுந்திருந்து, தான் குளிர்ந்த ஜலத்தில் குளித்துவிட்டு, சுசீலாவும் தங்கமணியும் ஸ்நானம் பண்ணுவதற்காக வெந்நீர் போடுவாள். பிறகு காப்பி போட்டுத் தயாராய் வைத்திருப்பாள். சுசீலா எவ்வளவு மன்றாடியும் மதுரம் அவளை ஒரு வேலையும் செய்ய அனுமதிக்கவில்லை. சுசீலாவுக்குச் சமையல் அறைக்குள் நுழையவேண்டிய அவசியமே இல்லாமற் போய்விட்டது.

மணி பத்தடிப்பதற்குள் புசித்து விட்டுத் தங்கமணி ஆபீஸுக்குப் போய் விடுவான். ராம சர்மாவுக்கோ எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது வேலை இருந்து கொண்டே இருக்கும். வீட்டுக்கு வந்ததும் வராததுமாய் அவர் பெரிய பசுமாடு ஒன்றை வாங்கிக் கட்டிவிட்டார். காலையில் எழுந்ததும், மாட்டுக்குத் தண்ணீர் காட்டுவது, வைக்கோல் போடுவது, தவிடு புண்ணாக்கு வைப்பது முதலிய வேலைகளைத் தம் கைப் படச் செய்தால்தான் அவருக்குத் திருப்தி. அப்புறம் கடைக்குப் போய் வருவார். வந்து தோட்டத்தை எல்லாம் சரி பார்த்து விட்டுக் குளித்துச் சாப்பிடுவதற்குப் பன்னிரண்டரை மணியாகிவிடும். அப்புறம் சற்று நேரம் வராந்தாவில் பெஞ்சி மேல் படுத்துக் கண் அயர்வார். பிறகு எழுந்திருந்து தாம் ஊரிலிருந்து கொண்டு வந்திருந்த ராட்டையில் நூல் நூற்கத் தொடங்கி விடுவார்.

சுசீலாவும் மதுரமும் தங்கமணி சென்றதுமே சாப்பிட உட்காருவார்கள். எதையாவது பேசிக் கொண்டே காலத்தை ஓட்டுவார்கள். முன்பெல்லாம் சுசீலா சாப்பாடானதும் ஒன்றும் செய்யத் தோன்றாமல் கொட் கொட்டென்று தனிமையில் உட்கார்ந்து பொழுதைக் கழிப்பாள். மதுரம் வந்த பிறகு அவளுக்கு மத்தியான வேளைகளில் நேரம் போகிறதே தெரியவில்லை. மதுரத்தைப் பாடச் சொல்லிக் கேட்டு அனுபவிப்பாள். சில சமயங்களில் தானும் பாடுவாள். சிறு பெண்ணாய்

இருந்தபொழுது அவள் விளையாடின விளையாட்டுக்கள், செய்த விஷமங்கள், வேடிக்கைகள் எல்லாம் மறுபடி புத்துயிர் பெற்றன. தாயக்கட்டையும், பல்லாங்குழியும், ஏழாங்காயும் குழந்தைகளிடம் அகப்பட்டு விழிப்பதைப் போல் இவர்களிடமும் அகப்பட்டு விழித்தன.

ஒரு நாள் சுசிலா கடைக்குச் சென்று மதுரத்திற்கு ஒரு புடவை வாங்கி வந்தாள். மதுரத்தினிடம் இருந்த புடவைகள் இரண்டுதான். காப்பிக் கலர் மல் புடவை ஒன்று, பச்சை வர்ணப் புடவை ஒன்று. இரண்டும் வாங்கி வெகு நாளானவை. பல இடங்களில் பொட்டுப் பொட்டாய்க் கரைந்து போகத் தொடங்கி இருந்தன. மதுரம் அவற்றைக் கட்டிக் கொள்வது நன்றாக இல்லை என்று சுசிலாவுக்குத் தோன்றிற்று. தன் வீட்டில் இருக்கிற வரையில் அவளுக்கு ஒரு குறைவும் இல்லாதபடி வைத்துக்கொள்ள வேண்டும் என்று அவள் விரும்பினாள். கிழிசல் புடவையைக் கட்டிக் கொண்டு அவள் நின்றால் வீட்டுக்கு வருகிறவர்கள் என்ன நினைப்பார்கள் என்று அவளுக்குக் கவலை.

அவள் கடையிலிருந்து வந்து, காகிதத்தைப் பிரித்துப் புடவையை வெளியே எடுத்ததும் மதுரத்திற்கு ரொம்பவும் சங்கோசமாய்ப் போய்விட்டது. புடவை வெகு நேர்த்தியாக இருந்தது. சிவப்பாக இருப்பவர்களுக்குப் பச்சைப் புடவை தான் எடுத்தது என்று சுசிலா பச்சையில் சன்னமாகக் கருப்புக் கட்டங்கள் போட்ட புடவையாகப் பார்த்து வாங்கியிருந்தாள்.

மதுரம் புடவையைப் பிரித்துப் பார்த்து விட்டு, "ஏன் அக்கா, எனக்கா இந்தப் புடவை வாங்கிக் கொண்டு வந்தாய்? எனக்கு எதற்கு இவ்வளவு உசத்தியான புடவை? அதிக விலை இருக்குமே" என்றாள்.

"அதிக விலை ஒன்றும் இல்லை, பதின்மூன்றரை ரூபாய்தான். ஒரே விலை பதினைந்து ரூபாய் என்றான்; அப்புறம் எனக்காக ஒன்றரை ரூபாய் குறைத்தான். சாயம் போகாது என்கிறான். போனால் திருப்பிக் கொடுத்து விடலாம். எங்கே கட்டிக் கொள் பார்க்கலாம். உனக்கு அகலம் போருகிறதா பார்ப்போம்."

"நீ ஒரு நாளைக்குக் கட்டிக்கொள்ளேன் அக்கா; எப்படி இருக்கிறது என்று பார்க்கலாம். அப்புறம் நான் கட்டிக் கொள்கிறேன். எங்க ஆத்திலே அப்பா எனக்குப் புடவை வாங்குகிற போதெல்லாம் அம்மாதான் முதலில் அதைக் கட்டிக்கொள்வாள். அப்புறம் தான் நான் அதை உடுத்திக் கொள்வேன்" என்றாள்.

அன்று மாலை, தங்கமணி ஆபீஸிலிருந்து வந்ததும் மனைவியைப் பார்த்து "ஏது இந்தப் புடவை? பேஷாயிருக்கிறதே! உன் அப்பாவின் ப்ரெஸண்டா?" என்று கேட்டான்.

"ஏன், நன்றாக இல்லையா என்ன?" என்றாள் சுசிலா.

"நன்றாய் இருக்கிறது என்றுதான் சொல்கிறேன். ஏது?"

"இன்று மத்தியானம் கடைக்குப் போய் வாங்கிக் கொண்டு வந்தேன், மதுரத்திற்குச் சுத்தமாய்ப் புடவையே இல்லை. கிழிசலை மறைத்து மறைத்துக் கட்டிக்கொள்கிறாள் பாவம்"

"மதுரத்திற்கா?" என்று தங்கமணி மறுபடி புடவையைப் பார்த்துவிட்டு, "என்ன விலை?" என்றான்.

"பதிமூணரை ரூபாய்"

"பதிமூணரையா? அடேயப்பா! பதிமூணரை ரூபாய் போட்டுப் புடவை வாங்கிச் சமையல்காரிக்குக் கொடுத்தால் கட்டுமா? கொஞ்சம் குறைந்த விலையில் பார்க்கக் கூடாதோ?"

சுசிலாவுக்கு மனதில் சுருக்கென்றது. "போனால் போகிறது பாவம்; பதிமூணரை ரூபாய்தானே? என் தங்கை, என் தங்கை என்று சொல்லிக் கொண்டு மூணு ரூபாயில் ஒரு புடவை வாங்கிக் கட்டிக்கொள்ளச் சொன்னால் பார்க்கிறவர்கள் என்ன நினைப்பார்கள்? இந்த மாதிரி இரண்டு புடவை வாங்கிக் கொடுத்தால் அவளுக்கு ஒரு வருஷத்துக்கு உழைக்கும்" என்றாள்.

"இதை நீயே கட்டிக் கொள்ளேன். அவளுக்கு வேறே வாங்கிக் கொடுத்து விட்டால் போகிறது உனக்கு இந்தப் புடவை ரொம்ப அழகாய் இருக்கிறது" என்றான்.

"இல்லை, வேண்டாம். அவளுக்கென்று வாங்கிவிட்டு அதை நான் வைத்துக் கொண்டால் நன்றாய் இராது. எனக்கு வேண்டுமென்றால் இந்த மாதிரியே இன்னொன்று வாங்கிக் கொள்ளுகிறேன்" என்றாள் சுசிலா.

(தொடரும்)

# உணவுக் கட்டுப்பாடு

"பரணன்"

"சோழவளநாடு சோறுடைத்து" என்பது பழமொழி. இந்தியாவிலே மற்றெந்த நாடுகளில் என்ன என்ன பொருள்கள் கிடைத்த போதிலும், பஞ்சம் என்பதாக ஒன்று தோன்றி விட்டதானால், அப்போது உதவுவது சோழ வளநாடு; சோறு கொடுத்து உயிர்களைப் பாதுகாக்கிறது.

இன்றும் அந்தப் பெருமைக்கு ஒன்றும் குறைவில்லை. ஆனால், நாள் தவறாமல், "மிராசுதார்கள் துயரம்" என்ற செய்திகளையும் கட்டுரைகளையும் பத்திரிகையில் படிக்கிறோம்; "அரிசிக் கட்டுப்பாடு", "அரிசியைத் தஞ்சாவூர் ஜில்லாவிலே ரயிலேற்ற அனுமதி கிடையாது" என்றெல்லாம் பத்திரிகைத் தலைப்புக்களைப் பார்க்கிறோம்.

உணவு விஷயமாக சர்க்காரின் பலவித உத்தரவுகளினால் ஏற்பட்டிருக்கும் இன்றைய நிலையை மறந்து விடுவோம். இருநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த தமிழ்நாட்டுக்குள் புகுந்து பார்ப்போம்.

* * *

குப்பன் ஒரு குடியானவன். எங்கேயோ ஒரு சிற்றூரிலே, தண்ணீர் இல்லாத இடத்திலே வாழ்ந்தான். அவனுக்கு இருந்ததெல்லாம் ஒரு காணி நிலம். தண்ணீர் இறைத்து நிலத்தை நன்செய்யாக்கி, நெல் சாகுபடி செய்ய வசதியில்லை. இருந்தாலும், எப்படியோ ஒரு வகையிலே வேறு ஏதாவது புன்செய்ப் பயிர் செய்வோமென்று அவன் உறுதி கொண்டான். அவனுடைய அப்பன் பாட்டன் முதலியவர்கள் தோண்டின ஊற்றுக் குழியொன்றிருந்தது. அதை ஆழமாகத் தோண்டினான். அதில் ஒரு கையேற்றமும் போட்டான். போட்டுத் தண்ணீர் இறைத்து, ஏதோ பயிர் செய்தான். அந்த மண்ணிலே வேறு எதுவும் பயிராகவில்லை; வெள்ளரி ஒன்றுதான் நன்றாகப் பயிராயிற்று. காணி முழுதும் வெள்ளரி போட்டான். கொடி நன்றாய்த் தழைத்து. எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேலென்று படர்ந்துவிட்டது. நிலத்தையும் அதிலுள்ள வெள்ளரிக் கொடியையும் பார்க்குந்தோறும், குப்பனுக்கும் அவன் மனைவி குப்பாயிக்கும மட்டற்ற மகிழ்ச்சி.

கொடிகள் பூக்கவும் ஆரம்பித்தன. முதல் சில நாட்கள், அங்கொன்று இங்கொன்றாகச் சில மஞ்சட் பூக்கள் தெரிந்தன. பிறகு பார்த்தால், காலையிலே, காணி முழுவதும் ஒரே மஞ்சள் பூவாக அடர்ந்துவிட்டது. குடியானவனுக்குக் கண் கொள்ளாக் காட்சி, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சி!

நாட்கள் ஆயின; பூவெல்லாம் பிஞ்சாக மாறிப் பறிக்கத் தக்க பருவமடைந்தன. இன்னும் இரண்டு மூன்று நாள் போகட்டும்; எல்லாவற்றையும் சேர்த்தாற் போற் பறிக்கலாம்; பறித்துத் தன்னோடு வேலை செய்த மற்றக் குடியானவர்களுக்கும் ஊரிலுள்ளவர்களுக்கும் கொடுக்கலாம்; சில காய்களை இப்படிக் கொடுத்துவிட்டு, மிகுதியுள்ளவற்றைக் கொண்டு போய், பக்கத்தூரிலுள்ள சந்தையிலே காயொன்று இரண்டு காசு வீதம் விற்று, வருஷத்துக்கு வேண்டிய அரிசி முதலிய தானியங்களும், வேட்டியும் புடவையும் வாங்கிக் கொண்டு வரலாம் என்று திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள், குப்பனும் குப்பாயியும்.

அன்று மத்தியானம் நல்ல வெயில் நேரம், கொல்லையிலே குப்பன் நின்று கொண்டிருந்தான். சாலை வழியே குதிரைக் காலடிச் சத்தம் கேட்டது. இரண்டு குதிரை வீரர்கள் விரைவிலே நெருங்கி வந்துவிட்டார்கள். வீரர் இருவருள் ஒருவன் கறுப்பன், மற்றவன் வெள்ளைக்காரன். வெள்ளரிக் கொல்லைக் கெதிரிலே, சாலையிலிருந்த ஆலமரத்து நிழலில் இருவரும் சிறிது நின்று குதிரையை விட்டு இறங்கினார்கள். இந்தியனான கறுப்பு வீரன், சாலையிலிருந்து குப்பனை நோக்கி வந்தான். அவன் தாகத்தோடு வருகிறானென்று அறிந்து, அவனுக்குக் கொஞ்சம் நீர் மோர் கொடுத்துவிட்டு, ஐந்தாறு வெள்ளரிப் பிஞ்சும் பறித்து அவன் கையில் கொடுத்தனுப்பினான் குப்பன். இவ்வளவு தான் அன்றைய நிகழ்ச்சி, குப்பன் அறிந்த வரையிலே.

வெள்ளரிக்காயோடு சென்ற கறுப்பு வீரன், காயை வெள்ளை வீரனிடம் தந்து





தின்னும்படி சொன்னான். வெயிலிலே வந்து களைப்புற்றுத் தாகவிடாய் கொண்டிருந்த அவனுக்கு இளம் வெள்ளரிப் பிஞ்சுகள் தேவாமிர்தமாக இருந்தன. ஐந்தாறையும் அவனே தின்றுவிட்டான். தின்ற பின் தாகவிடாயும் சிறிது அடங்கிற்று.

படை வீடு அடைந்தவுடன், அவ்வீரன், தன்னுடனொத்த பிற வீரர்களிடம் தான் வெள்ளரிக்காயை உண்டதையும் அதன் குளிர்மையையும் இனிமையையும் எடுத்துச் சொன்னான். உடனே அவ் வெள்ளரித் தோட்டத்துக்குப் போக எல்லோரும் ஆவல் கொண்டார்கள். ஆனால், படைத் தலைவன் அறியாமல் இக் காரியத்தில் முனைவது ஒழுங்கு முறைக்கு மாறானது என்றெண்ணி, எல்லோருமாகப் படைத் தலைவனிடம் தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள்.

இச்செயல் அவனுக்கும் உடன்பாடுதான். ஆனால், 'சுதேசிகள்' (—இது நடந்தது இருநூறு ஆண்டுகளுக்கு முன் என்பது நினைவில் இருக்க வேண்டும்—) ஒன்று கூடிச் சண்டைக்கு வந்து விட்டால் என்ன பண்ணுவதென்று யோசித்தான். அனாவசியமாக ஏன் விரோதத்தைத் தேட வேண்டும் என்று அவன் கருதினான். ஒரு யோசனை தோன்றிற்று. உடனே தன் படையிலிருந்த தமிழ் முன்ஷியைக் கூப்பிட்டான்.

“நாளைக் காலையில் நம்முடைய படை வீரர் வண்டியோடு உன் வெள்ளரித் தோட்டத்துக்கு வருவார்கள்; இருக்கிற பாய் பிஞ்சு எல்லாவற்றையும் ஒன்று பாக்கியில்லாமல் பறித்து வண்டியில் போட்டு விட்டு இரண்டு காய்க்கு ஒரு காசு விதம் காசு வாங்கிக் கொள். இது நமது கட்டளை; கீழ்ப்படியா விட்டால் தண்டனை.”

என்ற கட்டளையை ஒரு காகிதத்தில் எழுதச் சொன்னான். எழுதியாயிற்று. அதில் கையெழுத்திட்டு, அதே வெள்ளை வீரனிடம் தந்து, உடனே போய், தோட்டத்தில் கண்ட குப்பனிடம் கொடுக்கும்படி உத்தரவிட்டான்.

குப்பன் இக்நேரத்திலும் அதே கொல்லையில் நின்றுகொண்டிருக்கிறான். சாலையிலே 'டக் டக்' என்று வருகிற குதிரையின் சத்தம் கேட்டது. அவன் தலை நிமிர்ந்து பார்ப்பதற்குள், அந்த வெள்ளைக் குதிரை வீரன் குதிரையிலிருந்து இறங்கி, ஒரு கடுதாசியை எடுத்து நீட்டினான். குப்பன் என்னவோ என்று நினைத்து அதை வாங்கினான். இவன் பதிலுக்குக்காத்திராமல், குதிரை வீரனும் மீண்டு போய்விட்டான்.

கடுதாசியைப் பிரித்துப் படித்தான் குப்பன். வெள்ளைக்காரப் படைத் தலைவன் கட்டளையும் புரிந்தது. ஒன்றுமே விளங்கவில்லை அவனுக்கு. அப்படியே மனம் இடிந்து, கற் சிலை போல உட்கார்ந்து விட்டான்.

நிலம் தரிசாய்க் கிடக்கிறதே என்று அவன் அடைந்த கவலை என்ன, பட்ட கஷ்டமென்ன, குப்பாயியும் அவனுமாகக் குழிதோண்டி இறைத்ததென்ன, இறைத்து வெள்ளரி போட்டு, இரவும் பகலும் காவல் காத்ததென்ன— இன்று எங்கேயோ இருந்து வந்த ஓர் அயல் நாட்டுப் பட்டாளம் அப்படியே வந்து கொண்டு போகத் துணிந்ததென்றால் அவனுக்கு மனம் எப்படியிருக்கும்? வயிறு எரியாதா, உள்ளம் கொதிக்காதா? எரிந்தும் கொதித்தும் அவனால் என்ன செய்ய முடியும்? 'விலைக்குத்தானே உன்னிடம் வாங்கிக் கொண்டேன்?' என்று படைத் தலைவன் நியாயம் சொல்லி விடுவான் அல்லவா?

இப்படியெல்லாம் நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணாகியிருந்த குப்பன், சாப்பாட்டையே மறந்தான்; வீட்டுக்குப் போகவும் மறந்தான். குப்பாயியோ, வெயிலுக்கு முந்தியே அவன் திரும்ப வேண்டுமே இன்னும் திரும்பவில்லையே, என்ன காரணம் என்று நினைத்துப் பார்த்தாள். வெகு நேரம் காத்திருந்தும் பார்த்தாள். அப்படியும் அவனைக் காணாமையால் தேடிக்கொண்டு, தோட்டத்துக்கே வந்துவிட்டாள். வந்து, அவன் முகம் வாடியிருந்ததைக் கண்டாள். "என்ன நடந்தது, ஏன் வருத்த வேண்டும்?" என்று கேட்டாள்.

நடந்ததைக் குப்பன் எப்படிச் சொல்வான்? தாகம் என்று வந்தவர்களுக்கு இரங்கித் தருமம் செய்யப் போக, அது இவ்வளவு தீம்பாக முடியுமென்று அவன் கண்டானா? இவ்வளவு தீமைக்கும் தான் செய்த தருமம்தான் காரணமென்பதை எண்ண, அவனுக்கு ஆத்திரமும் அதனோடு கூடச் சற்றே சிரிப்பும் கலந்து வந்தது.

நாட்டுப் புறத்தான்தானே குப்பன்? இலக்கணம் அவ்வளவாகப் படித்ததில்லை அவன். ஆனாலும் அந்த நிலையிலே தன் ஆத்திரம் தீர ஒரு பாட்டுக் கட்டிவிட்டான்:—

ஊரான் ஊரான்
தோட்டத்திலே
ஒருத்தன் போட்டானாம்
வெள்ளரிக்காய் — அதைக்
காசுக்கு ரெண்டு
விற்கச் சொல்லிக்
காயிதம் போட்டாண்டி
வெள்ளைக்காரன்!

உள்ளக் கொதிப்பை எவ்வளவு நன்றாய் வெளியிடுகின்றன இந்த எளிய சொற்கள்?

இந்த வாய்மொழிப் பாட்டை டி. கே. சி. யவர்கள் சில ஆண்டுகளுக்கு முன் சொல்லக் கேட்டுப் பெரிதும் அனுபவித்தேன். ஆனால், அன்று இது எவ்வளவு தூரம் பொருத்தமென்பதைத் திட்டமாக உணர்ந்து கொள்ளவில்லை. இன்றுள்ள நிலைமையில், தொடக்கத்தில் சொன்ன செய்திகளை மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்து பார்த்த பிறகுதான், இந்தப் பாட்டு எவ்வளவு பரிதாபமான நிலையை விளக்குகிறது என்பதை நன்றாக உணர முடிகிறது.

---


உங்களுடைய



தொண்டை

சுவாசக்குழாய்களை

காப்பாற்றுவதற்கு

ஸிரோலின்

இருமலையும்
க்ஷயதோஷத்தையும்
ஒழிக்கிறது

ரோச் உபயோகியுங்கள்



ஸிரோலின் ஒரு பாட்டில் விலை ரூ. 3-12-0

# தார்பாய்களும், கேன்வாஸ்களும்

## முதன்மை ஸ்தானம் வகிக்கின்றன.

நீடித்த உழைப்பிற்கும், எக்கால சீதோஷ்ண நிலைக்கும், எத்தகைய அசாதாரண உபயோகத்திற்கும் உகந்தவாறு இவைகள் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

பார்க்மயர் பிரதர்ஸ் லிமிடெட், ரேஸ் கோர்ஸ் ரோடு, கோயமுத்தூர்

மைசூர் சமஸ்தானம், சென்னை, காக்கிநாடா முதலிய இடங்களுக்கு ஏஜெண்டுகள்



**கில்லாண்டர்ஸ் அர்பத்நாட் & கோ.,**

முதல் லைன் பீச், :: த. பெ. 261, மதராஸ்.



## கோகிலத்தின் தீங்குரல்



ஸ்ரீமதி என்.ஸி. வஸந்தகோகிலம்






<u>புதிய வெளியீடு</u>

N. 18206 { ஞானகுருபர (பாகம் 1) பல்லவி
.. (பாகம் 2) இராகமாலிகை

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

M. SAMUEL

"எச். எம். வி." எஃகு ஊசிகள்

சில்லறையில் விற்க நிர்ணயித்த விலை

200 ஊசிகளடங்கிய டப்பி 1-க்கு ரு. 1—8—0 மட்டுமே.

---

எல்லா "எச். எம். வி." கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

Regd. No. M. 4392


ரேடியோ என்ற பெயரிலேயே




முதன்மையானது மகத்தானது

மாடல் 2126/ஏ, 1943 வருட புதிய மாடல்
ஆறு வால்வுகள் ஏ. ஸி. மெயின்ஸ் மாடல்

பாண்டு ஸ்பெரேட் ட்யூனிங், எலிப்டிகல் ஸ்பீக்கருடன் கூடிய இப் புதிய மாடல் மார்க்கோனிபோன் ரேடியோவைக் கேட்டு அனுபவித்து நீங்கள் ஆனந்தப்பட்டிருக்கிறீர்களோ?



13, 16, 19, 25, 31 மீடர் பாண்டுகளுக்கு பாண்டு ஸ்பெரேடிங்குகளுடன் கூடிய எட்டு வேவ் பாண்டுகள் உடையது.

●

மாஜிக் ஐ இல்லாமல்
விலை ரூ. 495

# மார்க்கோனிபோன்

வால்வுகள், பிக்கப்புகள், (டோன் ஆமுடன்) ஸெளட் ஸ்பீக்கர்கள், வால்யூம் கண்ட்ரோல்கள் இவைகள் சகலமும் எங்களிடம் இப்போது கைவசமுள்ளன.

●

சென்னை ராஜதானிக்கு (ஸமஸ்தானங்கள் உள்பட) ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

ஸ்ரீ ராம விலாஸ் ஸர்வீஸ் லிமிடெட்.,
202-203, மௌண்ட் ரோடு :: மதராஸ்


Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.